செலவுகள் குறையும்

இலாபங்கள் அதிகரிக்கும்

# பயர்ஸ்டோன் டயர்கள்

## உங்கள் சாமான்களை தூக்கிச் சென்றால்

சவாரி நிலைமைகளை ஆராய்ந்து உங்கள் தேவைகளுக்கேற்ற பயர்ஸ்டோன் டயரை வாங்கினால் உங்கள் செலவுகள் கணிசமான அளவுக்கு குறையக் கூடும்.

ஒவ்வொரு விதமான சவாரிக்கும் எல்லா சமய சந்தர்ப்பங்களிலும் அதிகப் பட்சமாக, நம்பகமாக, நிறம்பட உழைக்கக்கூடிய பயர்ஸ்டோன் டயர் இருக்கிறது.

TRANSPORT

**பயர்ஸ்டோன் டிரான்ஸ்போர்ட்:** பஸ் ட்ரக்குகளுக்கு நல்ல வேகத்தில் சிறந்த ரஸ்தாக்களில் நீண்ட தூர சவாரிக்கேற்ற அசாதியான டயர்.

ALL TRACTION

**பயர்ஸ்டோன் ஆல்-டிராக்ஷன்** இருவித காரியங்களை புரியும் டயர். நல்ல ரஸ்தாக்களில் நீண்ட தூர சவாரிக்கு நிறம்பட உழைக்கும். அது தவிர காடு முரடான ரஸ்தாக்களில் நல்ல பிடிப்புதரும்.

HT 23



**பயர்ஸ்டோன் H. T. 23:** உள்ளூரில் வண்டியை அடிக்கடி நிறுத்தி ஓட்ட வேண்டிய சந்தர்ப்பங்களிலும் மலைப்புற இடங்களில் சவாரிக்கும் உகந்த டெலிவரி டயர்.

உங்கள் **Firestone** டீலரிடம் இந்த புதிய டயர்களைப் பற்றி கேளுங்கள்

# பாரதியின் அமர ஜயந்தி

பகீரதன்

"சபாஷ்!" என்று சத்தம் கேட்டது.

திரும்பிப் பார்த்தேன்.

"சென்னை ஜமாய்த்து விட்டது!" என்றார்.

"இதுவரையில் சென்னை எந்தக் காரியத்தில் பின் தங்கி யிருக்கிறது!" என்றேன்.

"இருந்தாலும் சென்ற இரண்டு தினங்களில் சென்னை நகரின் சிறப்பு மிக உயர்ந்து விட்டது" என்றார் மீண்டும்.

அவர் கண்களிலே ஊக்கமும் உற்சாகமும் ஜொலித்தன. முகத்திலே குதூகலமும் பெருமையும் சேர்ந்து காணப்பட்டன.

நானும் அவருடன் கலந்து கொண்டேன். "உம்முடைய குதூகலத்துக்குக் காரணம் தெரிந்து போய்விட்டது. பாரதி விழாவைப் பற்றித் தானே சொல்லி ஆனந்தப் படுகிறீர்!" என்றேன்.

"என்ன அப்படி சப்புச் சவுக்கென்று சொல்லுகிறீரே! இதுபோன்ற அருமையான விழாவை நான் இதற்குமுன் சென்னை நகரில்,—சென்னை நகரில் என்ன! வேறு எங்குமே பார்த்ததில்லை" என்றார் ஒரு குதி குதித்துக் கொண்டே.

அவருடைய குரல் மேலும்மேலும் உச்ச ஸ்தாயியில் போய்க் கொண்டிருந்தது.

"இதைத்தான் ஐயா, 'புதிய உயிர்' என்று அந்த மகான் பாரதியார் சொல்லிவிட்டுப் போயிருக்கிறார். அறிவும், லோகோபகாரமும், வீரமும் மங்கிப் போயிருந்த சமயத்தில் உண்மையாகவே சென்ற இரண்டு நாள் பாரதி விழாவினால் புதிய உயிர் ஏற்பட்டிருக்கிறது" என்றார்.

இப்படி, சென்னை மக்கள் பேசிப் பேசி, பெருமைப் படும்படியாகச் சென்ற 11, 12உ களில் பாரதியார் அமர ஜயந்தி சென்னை மா நகரத்தில் மனோக்ஞமாக நடந்தேறியது.

சென்னை அரண்மனைக்காரன் தெருவில் உள்ள கச்சாலீஸ்வரர் சன்னிதியில் பாரதியார் பவமாதிரி காட்சி தந்தார்; வர்ணச் சித்திரங்களில் தோற்ற மளித்தார்; ரஸிகர்களின் அறிஞர்களின் சொற் சித்திரங்களில் சுடர்விட்டு ஒளி வீசித் திகழ்ந்தார்; சங்கீத வெள்ளமாகப் பொங்கிப் பெருகினார்; இசை நாடகத்திலே கம்பீரமாகத் தோன்றி ஜயபேரிகை கொட்டி ஆயிரக்கணக்கான தமிழ் மக்களின் தோள்கள் பூரிக்கச் செய்தார். தெரு முனைகளிலே நின்று தமிழ் முழக்கம் செய்தார். இதனுடனெல்லாம் தவிர்க்கமுடியாத சில சில்லறைத் தொல்லைகளையும் அனுபவித்தார். இந்த மகத்தான காட்சிகளை நேரில் பார்த்து மகிழ்வதற்குக் கொடுத்து வைத்தவர்கள், பாக்கியசாலிகள் என்று சொன்னால் அது மிகைப் படுத்துவதாகாது.

** ** **

செப்டம்பர் மாதம் 11உ காலையில் சென்னை நகரில் உள்ள பாரதி பக்தர்கள் லிங்கச் செட்டித் தெருவில் உள்ள தேசிய வாலிபர் காங்கிரஸின் காரியாலயத்தை நோக்கிப் படையெடுத்தனர். வட சென்னையைப் பிடிப்பதற்கு அல்ல; பாரதி விழாவின் முதல் நாள் காலை நிகழ்ச்சியில் கலந்து கொள்வதற்குத்தான். இந்த வருஷம் பாரதிவிழா சென்னையில் நடப்பதற்கு மூலகாரணம் மேற்படி தேசிய வாலிபர்களின் பெரு முயற்சியே யாகும்.

பாரதியார் பக்தர்கள் குதூகலத்துடன் முன்னும் பின்னும் திரண்டு வர பாரதி விழா ஊர்வலம் புறப்பட்டது. ஊர்வலத்துக்கு முன்னால் பளபள வென்று மின்னும் தங்க முகபடாம் அணிந்து கொண்டு, 'டாண்! டாண்!' என்று மணி ஓசை ஒலிக்க மத்தகஜம் சென்றது. அந்த மணி ஓசை "மகா கவி வருகிறார், பராக்!" என்று கட்டியம் கூறுவது போலிருந்தது. யானை யாரையும் லட்சியம் செய்யாமல் குன்றம் அசைவது போல அசைந்து துதிக்கையை ஒய்யாரமாக ஆட்டிக் கொண்டு சென்றது. தான் மகா கவியின் கட்டியக்காரன் என்ற பெருமையினால் தானோ என்னவோ என்று வியக்கும்படி இருந்தது.

ஏராளமான தமிழ் அன்பர்களும், பெண்மணிகளும், எழுத்தாளர்களும், பத்திரிகையாளர்களும் மகா கவிக்கு முன்னால் மரியாதையுடன் வந்து கொண்டிருந்தனர். விழாவின் தலைவரான நிதி மந்திரி ஸ்ரீ சி. சுப்பிரமணியம் ஊர்வலம் முழுவதும் சுமார் இரண்டு மணி நேரம் நடந்து வந்து கவியரசர் பாரதியாருக்கு மரியாதை செய்ததைப் பாராட்டாதவர்கள் இல்லை.

நாதஸ்வர வித்வான் திருவெண்காடு ஸ்ரீ சுப்பிரமணியப் பிள்ளைக் கோஷ்டியார் தெருவெல்லாம் இசை முழக்கம் செய்து கொண்டு சென்றார்கள்.

இவ்வளவு பரிவாரங்கள் முன் செல்ல, பின்னால் அலங்கரித்த ரதத்தில் ஸ்ரீ சுப்பிரமணிய பாரதியாரின் திரு உருவப் படத்தை வைத்திருந்தார்கள். அதில் பூட்டியிருந்த இரண்டு ரிஷபங்களும் ஒயிலான நடையுடனும் நேர்கொண்ட பார்வையுடனும் ரதத்தை இழுத்து வந்தன. நீளமான கொம்புகளை ஆட்டி ஆட்டி வரும் ரிஷபத்தைப் பார்க்கும்போது மகாகவியின் மெய்காப்பாளர்கள் தாங்கள்தான் என்று சொல்லிப் பெருமைப் படுவதுபோலத் தோன்றியது.

இந்த அருமையான ஊர்வலத்தில் கவியரசர் பாரதியார் அரியாசனத்தில் அமர்ந்து தமிழ்நாட்டின் தலைநகரான சென்னைமாநகரில் பவனி வருவது போலவே இருந்தது.

ஊர்வலம் அரண்மனைக்காரன் தெரு கச்சாலீஸ்வரர் சன்னதியை வந்தடைந்தது. அரண்மனைக்காரன் தெருவே திருவிழாக் கோலமாகக் காட்சி யளித்தது. "வாழ்க தமிழ்நாடு!" "ஓங்குக பாரதியின் புகழ்!" என்பன போன்ற வாழ்த்துக் கூறும் வளைவுகள் விழாவுக்கு வருபவர்களை முகமன் கூறி வரவேற்றுக் கொண்டிருந்தன. கச்சாலீஸ்வரர் சன்னதியில் அமைத்திருந்த விழாப் பந்தலின் முகப்பை எட்டையபுரம் பாரதி மணி மண்டபம் போல் அமைத்து அலங்காரம் செய்திருந்தார்கள். மண்டபத்தின் கோபுரத்தில் பொறித்திருந்த பாரதியின் வீரத் திருஉருவம் விழாவின் வெற்றியை எடுத்துக் கூறிக் கொண்டிருந்தது. இந்த அருமையான அலங்கார ஏற்பாட்டை, கலைநயமான முறையில் சுவரொட்டிச் சித்திரங்கள் தயாரிக்கும் விளம்பரச் சித்திரக்காரர்களான 'பானு பிரதர்ஸ்' மிக்க சிரத்தை எடுத்துக்கொண்டு பாரதி கைங்கரியமாகவே செய்திருந்தார்கள்.

ஸ்ரீ சின்ன அண்ணாமலை தேசியக் கொடியை ஏற்றி வைத்து அனைவரையும் வரவேற்று உற்சாக

மாகப் பேசினர். பாரதியின் கொடிப்பாட்டை மிகுந்த உணர்ச்சியோடு பாடினர். அவர் பேச்சுக்குத் தலை ஆட்டுவது போல் கொடி மரத்தின் உச்சியில் தாயின் மணிக்கொடி பட்டொளி வீசிப் பறந்து கொண்டிருந்தது.

விழாப்பந்தலின் உட்புறம் மிக்க அலங்காரமாக விளங்கியது. பந்தலில் காட்சியளித்த ஒவ்வொரு தூணும் பாரதியின் மணிவாசகத்தையும் பாரதியாரைப் பற்றிய அறிஞர்களின் அறிவுரைகளையும் தாங்கிக் கொண்டு நின்றன. மேடை மீது கவிச் சக்கரவர்த்தி பாரதியார் கையில் செங்கோலுடனும் தலையில் ராஜகம்பீரமான தலைப்பாகையுடனும் நம்மென்று முறுக்கிவிட்ட மீசையுடனும் அவருடைய கவிதைகளில் வர்ணித்திருப்பது போன்ற அழகிய இயற்கைச் சூழ்நிலையில் காட்சி அளித்தார். இந்த அற்புத உயிர் ஓவியத்தைத் தீட்டிய சைத்ரிகர் ஸ்ரீ ஆரியாவை அனைவரும் பாராட்டினர்கள். மகாகவியின் சபையில் திருவெண்காடு சுப்பிரமணியப் பிள்ளை கோஷ்டியார் நாதஸ்வரம் வாசித்து அரைமணி நேரத்துக்குமேல் கான வெள்ளம் பெருக்கினர்கள்.

பழனி ஸ்ரீமதி விஜயலக்ஷ்மி மிகவும் இனிய குரலில் பாரதி பாடல்கள் இரண்டும், பாரதியாரைப் பற்றிக் "குகன்" இயற்றிய பாடல்கள் இரண்டும் அருமையாகப் பாடினர்.

பிறகு பாரதியார் விழாவைத் தொடங்கி வைத்து தொழில் மந்திரி டாக்டர் யு. கிருஷ்ணராவ் தமிழில் அமோகமாகப் பேசினர். "நம் கல்வி மந்திரி டாக்டர் எம். வி. கிருஷ்ணராவ் பாரதியாருடன் திருவல்லிக் கேணியில் ஒன்ருகவே குடியிருந்தவர்" என்பதைக் குறிப்பிட்டார்.

பாரதியார் திருவல்லிக்கேணியில் வாழ்ந்த வீட்டைத் தேசத்தின் பொதுச் சொத்தாக்க வேண்டும் என்ற யோசனைக்குத் தொழில் மந்திரி ஸ்ரீ கிருஷ்ணராவ் ஆதரவு தந்தபோது சபையோரும் கைதட்டி ஆரவாரித்து ஆதரவு தந்தனர்.

பிற்பகல் ஸ்ரீமதி கே. எஸ். தனம்மாளின் இசை விருந்துடன் விழா ஆரம்பமாயிற்று. பாரதியார் பாடல்களையும் பாரதியாரின் புகழைக் கூறும் பாடல்களையும் உயர்ந்த கச்சேரி பாணியில் ஸ்ரீமதி தனம்மாள் பாடினர். கண்டதேவி ஸ்ரீ அழகர்சாமியும் ஸ்ரீ சீனிவாசனும் நல்ல முறையில் பக்க வாத்தியம் வாசித்து உதவினர்கள்.



பாரதி புகழ் பாடிய இசையாக
ஸ்ரீ எம். எம். தண்டபாணி தேசிகர்

பாரதி விழாவுக்குத் தலைமை தாங்கி நடத்திக் கொடுக்கும்படி நிதி-உணவு மந்திரி ஸ்ரீ சுப்பிரமணியம் அவர்களை ஸ்ரீ வி. தியாகராஜ செட்டியார் கேட்டுக் கொண்டார். தேசிய வாலிபர் காங்கிரஸ் உப தலைவர் ஸ்ரீ எம். கே. ராமகிருஷ்ணன் அதை வரவேற்று ஆமோதித்தார்.

பாரதி பக்தர்களும் தமிழ் அன்பர்களும் செய்த பலத்த கரகோஷங்களுக்கு இடையே நிதி மந்திரி அவர்கள் தலைமை தாங்கி நிகழ்த்திய சொற்பொழிவு மகாநாட்டுக்கே பெருமை யளிப்பதாயிருந்தது. "இந்நூரில் நடக்கும் அ. இ. கா. கமிட்டிக் கூட்டத்துக்குப் போகுமாறு ராஜாஜி என்னை வற்புறுத்தினர்கள். ஆனல் பாரதி விழாவுக்குத் தலைமை தாங்கும் பொறுப்பை ஏற்றுக் கொண்டதாகச் சொன்னவுடன் என்னை இங்கு இருக்க அனுமதி கொடுத்தார்கள்" என்று சொல்லி பாரதி விழாவுக்குத் தலைமை தாங்குவதை விடப்பெருமையளிப்பது வேறு என்ன இருக்கிறது என்று பெருமிதமடைந்தார். பாரதியின் பாடலில் உள்ள பெருமையைப் புதியதொரு முறையிலே எடுத்து விளக்கினர். இடர் களைய வழி சொல்லும் ஒரு பாட்டு, இன்ப எழில் பெருக்க வழி காட்டும் இன்னொரு பாட்டு என்ருர். "பாரதியார் நமக்கு அரசியல் விடுதலை, மொழி விடுதலை, பண்பாட்டின் விடுதலை வாங்கித் தந்து 'விடுதலை! விடுதலை! விடுதலை!' என்று முழங்கினர். பாரதிக்கு விழா கொண்டாடுவதன் மூலம் நம்மை நாமே பெருமைப் படுத்திக் கொள்கிறோம்" என்ருர்.

பாரதியார் வாழ்ந்திருந்த காலத்தில் "வந்தே மாதரம் என்போம்" என்ற பாடலைத் தமது கம்பீரமான குரலிலே தமக்கே உரிய தனியான பாணியிலே பாடினராம். அந்தக் குரலைக் கேட்டதும் காலம் சென்ற நீதிபதி ஸ்ரீ வி. கிருஷ்ணசாமி அவர்கள் தம் படுக்கையை விட்டு எழுந்து பாரதியாரிடம் நூறு ரூபாய் பணத்தை எடுத்துக் கொடுத்து உடனே இந்தப் பாடலை அச்சிட்டுத் தமிழ் மக்களுக்கு வழங்க வேண்டும் என்று கூறினராம். இந்தச் சம்பவத்தை ஸ்ரீ கே. பாலசுப்ரமணிய ஐயர் சபையோருக்குச் சுவையோடு எடுத்துக் கூறிவிட்டுத் தமிழ்த் தாத்தா உ.வே. சாமிநாத ஐயர் அவர்கள் பாரதிக்கு "வரகவி" என்று பட்டம் சூட்டிய நிகழ்ச்சியையும் எளிய இனிய முறையில்கூறி, பாரதி பாடல்களை நல்ல முறையில் வெளியிடுவதற்குச் சென்னை சர்க்கார் ஏற்பாடு செய்ய வேண்டும் என்று வேண்டிக் கொண்டார்.

பாரதியாரின் புதல்வியான ஸ்ரீமதி தங்கம்மாள் "சக்தி ஓம்!" என்ற பாடலைப் பாரதியின் பாணியிலேயே பாடிக் கொண்டிருந்தபோது கூட்டத்தில் ஒரே கலகலப்பு ஏற்பட்டு விட்டது. எல்லாரும் ஒரு கணம் ஒன்றும் புரியாமல் தவித்தனர். யாரேனும் தண்ணீர்ப் பாம்பையோ அல்லது தவளையையோ விட்டுக் கூட்டத்தில் குழப்பம் உண்டாக்க முயற்சிக்கின்றனரோ என்று விழா நிர்வாகிகள் கவலைப்பட்டபோது ஜயகோஷமும், வாழ்த்தொலிகளும் கிளம்பி அவர்களின் கவலையைத் தணித்தன. அடுத்த கணம் நம் முதன் மந்திரி ராஜாஜி அவர்கள் மலர்ந்த முகத்துடன் கைத்தடியைக் கச்சிதமாக ஊன்றிக் கொண்டு கம்பீரமாகப் பந்தலுக்குள் நுழைந்தார். அப்படி அவர் நுழைந்ததுதான் தாமதம்; மேடைமீது வீற்றிருந்த தலை

வர்களிலிருந்து ஆண், பெண், சிறுவர், சிறுமியர் நிறைந்த அந்த மகா சபை அப்படியே எழுந்து நின்று ராஜாஜிக்கு மரியாதை செய்த காட்சி கண் கொள்ளாக் காட்சியாக இருந்தது. அப்பொழுது சபையில் எழுந்த சந்தோஷ ஆரவாரம் விழாப் பந்தலுக்கு எங்கே ஆபத்தை விளைவித்துவிடுமோ என்று பயப்படும்படி இருந்தது.

ராஜாஜி அவர்கள் சபையோருக்குக் கையெடுத்து வணங்கி விட்டு மேடைமீது அமர்ந்ததும் தான் எல்லாரும் அவரவர்கள் இருப்பிடத்தில் அமர்ந்தனர். விழா மேலும் தொடர்ந்தது.

பேராசிரியர் ஸ்ரீ ரா. பி. சேதுப்பிள்ளை "எவ்வளவோ வேலைகளுக்கும் தொல்லைகளுக்கும் மத்தியில் ராஜாஜி பாரதி விழாவுக்கு வந்ததே பாரதியின் பாடலில் உள்ள சக்தியல்லவா!" என்று கேட்டபோது சபையோர் ஆரவாரம் செய்து அதை ஆமோதித்தனர். "அகில இந்திய காங்கிரஸ் கூட்டம் நடக்கும் இந்தூருக்கு ராஜாஜி போகவில்லை. பாரதி விழா நடக்கும் இந்த ஊருக்கு வந்தார்கள்!" என்று ஒரு சமயோசிதமான சிலேடை போட்டுச் சபையோரைத் திணற அடித்தார். எந்த நாட்டில் பெண்கள் கண்ணீர் வடிக்கின்றனரோ அந்த நாடு அழியும் என்று கூறி வள்ளுவர், கம்பன், இளங்கோ அடிகள் முதலிய கவிஞர்கள் காட்டியிருக்கும் உதாரணங்களை எடுத்துக் காட்டினார். அதே கருத்தைப் பாஞ்சாலி சபதத்தில் பாரதியார் காட்டி யிருப்பதைச் சபையோர் மகிழும்படி பேசினார்.

தேசிய வாலிபர் காங்கிரஸுக்காக "கல்கி" ஆசிரியர் கவியரசர் பாரதியின் திருவுருவப் படத்தைத் திறந்து வைத்துப் பேசினார்.

"பாரதியார் பட்டினி கிடந்தார், பட்டினி கிடந்தார் என்று பாரதியையே பார்க்காத மக்கள் வீண் புலம்பல் புலம்புகிறார்கள். பாரதியாரை அவர் காலத்திலேயே மதித்துப் பாராட்டியவர்கள் இல்லாமற் போகவில்லை. அவர்களில் நீதிபதி ஸ்ரீ வி. கிருஷ்ணசாமி ஐயர் ஒருவர். இன்னொருவர் நம் ராஜாஜி. பாரதியாரைப் பார்ப்பதற்கென்றே ராஜாஜி சேலத்திலிருந்து புதுச்சேரிக்குப் போனார். அவர் பாடல்களை அவரிடமே கேட்டுவிட்டு, அவர் அளித்த விருந்தையும் சாப்பிட்டுத் திரும்பினார்" என்று எடுத்துக் கூறினார். "பாரதியார் இருக்கும்போது பட்டினி போட்டுக் கொன்றுவிட்டு இன்று பாரதிக்கு மண்டபம் கட்டுகிறார்கள். விழாக் கொண்டாடுகிறார்கள்" என்று விதண்டாவாதம் பேசும் வீணர்களுக்கு, "பாரதியார் இறந்தபோது நான் சிறு பையன். அவர் இறந்த பிறகுதான் எனக்கு அவரைப் பற்றித் தெரியும். நம்மில் இன்னும் பலர் அவர் இறந்ததற்குப் பிறகுதான் பிறந்தவர்கள். ஆகையால் பாரதியார் பட்டினி கிடந்ததைப் பற்றி நம் மண்டையை உருட்டுவதில் பயனில்லை" என்று விதண்டவாதக்காரர்களின் மண்டையில் அடித்தாற் போல் சொன்னபோது மக்கள் கரகோஷம் செய்து மகிழ்ந்தனர். முடிவாக "சூரியனுக்கு முன்னால் தீபம் போடுவதுபோல உங்களுக்கு முன் பாரதியின் படத்தைத் திறந்து வைக்கிறேன்" என்று கூறி, மூடியிருந்த பாரதியின் படத்தைத் திறந்து வைத்தார்.

கடைசியில் ராமகிருஷ்ண லஞ்ச் ஹோம் அதிபர் ஸ்ரீ வி. ஆர். ராமநாத ஐயர் மலையாளத் தமிழில் வந்தனோபசாரம் கூறுகையில் தமது மாமன் காலஞ்சென்ற ஸ்ரீ சங்கரய்யர் பாரதியாரிடம் கொண்டிருந்த பக்தியைப் பற்றிக் கூறினார்.



பாரதியார் சங்கக் காரியதரிசி
ஸ்ரீ ஆக்கூர் அனந்தாச்சாரியார்

பிறகு அரியக்குடி ஸ்ரீ ராமானுஜ ஐயங்காரின் கச்சேரி நடைபெற்றது. கவிச் சக்கரவர்த்தியின் சபையில் சக்கரவர்த்தி ராஜகோபாலாச்சாரியார் மந்திரிமார்கள் புடைசூழ அமர்ந்திருக்க, ஜனாதிபதி ராஜேந்திரரால் பாராட்டப் பெற்ற பாரத நாட்டுக் கர்நாடக சங்கீத ஆஸ்தான வித்வான் ஸ்ரீ அரியக்குடி ராமானுஜ ஐயங்கார் அவர்கள் கச்சேரி செய்தது மகாகவி பாரதியின் விழாவுக்கு ஒரு தனிச் சிறப்பை அளித்தது.

அன்றைய ஸ்ரீ ராமானுஜ ஐயங்காரின் கச்சேரி, இதற்கு முன்னாலும் அப்படி அமைந்ததில்லை, பின்னாலும் இப்படி அமையுமோ என்னமோ என்று சொல்ல வியக்கும்படி அற்புதமாக அமைந்தது. இந்த யோக்கத கச்சேரிக்குப் பக்க வாத்தியம் வாசித்த வயலின் ஸ்ரீ பாப்பா வெங்கட்ராமய்யரும் மிருதங்கம் காரைக்குடி முத்து ஐயரும் கொடுத்து வைத்தவர்கள் என்றே சொல்லலாம். ஸ்ரீ பாப்பா வெங்கட்ராமய்யர் காம்போதி தனி ஆலாபனம் வாசித்தபோது "கொடுத்து வைத்தவர்கள் சபையிலிருந்த சங்கீத ரசிகர்கள்தான்" என்று சொல்லத் தோன்றியது.

அரியக்குடி அவர்கள் கச்சேரியின் பிற்பகுதியில் பாரதியார் கண்ணன் பாடல்களையும் ஆழ்வார்கள்-ஆண்டாள் பாடல்களையும் மாற்றி மாற்றி மிக அருமையாகப் பாடி வந்தார்.

அன்று பாரதியின் அமர ஜயந்தி என்பதோடு ஸ்ரீ கிருஷ்ண ஜயந்தியும் சேர்ந்திருந்தபடியால் பாடல்கள் வெகு பொருத்தமா யிருந்தன.

ராஜாஜி அவர்கள் கச்சேரி முடியும் வரையில் இருந்து கச்சேரியையும் அனுபவித்து 'பேஷ்' என்று வாய் திறந்து பாராட்டியும் அவ்வப்போது கரகோஷத்தில் கலந்து கொண்டும் உற்சாகமா யிருந்ததைக் குறிப்பிட வேண்டும்.

அரியக்குடி எத்தனை எத்தனையோ சபைகளில் எவ்வளவோ அபூர்வமாகக் கச்சேரி செய்திருந்



பாரதி பாட்டுப் போட்டியில் பரிசுபெற்றவர்கள்

தாலும் அன்று பாரதியின் அமரஜயந்தி விழாவில் செய்த கச்சேரிக்கு ஈடு இணையே கிடையாது.

** ** **

இரவு ஒன்பதரை மணிக்கு மேல் இசையரசு எம். எம். தண்டபாணி தேசிகரின் இசைக்கச்சேரி நடந்தது. நீண்ட காலமாகக் கச்சேரிகளில் பாரதியார் பாடல்களை அதிகமாகப் பாடிச் சங்கீத ரசிகர்களையும் தமிழ் அபிமானிகளையும் மகிழ்வித்து வந்திருக்கும் பாடகர்களில் ஸ்ரீ தண்டபாணி தேசிகர் முதன்மையானவர். எனவே, பாரதி விழாவில் அவர் கச்சேரி செய்தது எவ்வளவு பொருத்தம் என்று சொல்ல வேண்டியதில்லை.

ஸ்ரீ தேசிகர் பாரதியின் புகழை இசைமாரியாகப் பொழிந்தார். பந்தல் நிரம்பி அரண்மனைக்காரன் தெருவெல்லாம் தேசிகரின் இசைவெள்ளம் பெருக்கெடுத்து ஓடியது. ஸ்ரீ தேசிகரின் கச்சேரி அன்று ஆரம்ப முதல் உச்சஸ்தானத்தில்தான் இருந்தது. இருந்தாலும் அன்று அவர் "பாட்டுக் கொரு புலவன் பாரதியடா!" என்று பாடியபோது கச்சேரி மேலே மேலே மேலே போய் விண்ணையே முட்டி விட்டது. ஸ்ரீ தேசிகர் இந்தப் பாடலை எத்தனையோ முறை பாடி இருப்பார். அன்று பாடியபோது அது ஒரு புது மெருகு பெற்று விளங்கியதை எல்லாரும் அறிந்து அனுபவித்து மகிழ்ந்து கரகோஷம் செய்தனர்.

ஸ்ரீ தேசிகரின் கச்சேரிக்குப் பக்க வாத்தியமாக லால்குடி ஸ்ரீ ஜயராமன் வயலினும், காஞ்சிபுரம் ஸ்ரீ வீருசாமி மிருதங்கமும், ஸ்ரீ வேலாயுதம் கஞ்சிராவும் வாசித்தது இசை மழைக்கு மின்னலும் இடியும் போல மிக எடுப்பாக அமைந்தன.

** ** **

செப்டம்பர் 12ம் பிற்பகல் நாலு மணிக்கு நாதஸ்வர உலகில் பிரபலம் அடைந்துகொண்டிருக்கும் சைதாப்பேட்டை ஸ்ரீ நடராஜன் கோஷ்டியார் நாதஸ்வரம் முழங்க பாரதியார் விழா மீண்டும் தொடங்கியது. விழாத் தலைவர் ஸ்ரீ சுப்பிரமணியம், "ராஜாஜி அவர்கள் என்னிடம் 'விழா நன்றாகத்தான் இருந்தது. அதனால் நிரந்தரமான பலன் ஏதேனும் உண்டா!' என்று கேட்டார்கள். அவர்களுக்குக் காரியத்தினால் தான் தமிழ் மக்கள் பதில் கூற வேண்டும். உலக மொழிகள் எல்லாம் தலைவணங்கும்படியான புது நூல்களைத் தமிழில் உண்டாக்கப் பாடுபட வேண்டும். அப்படிப் பாடு பட்டால்தான் நாம் இது போன்ற விழாக் கொண்டாடுவதின் பலனை அடைந்தவர்களாவோம்'' என்று கூறி, விழாவை ஆரம்பித்து வைத்தார்.

பாரதி விழாவில் ஒரு சிறப்பான நிகழ்ச்சி, பாரதி பாடல் போட்டியில் கலந்து கொண்டு வெற்றி பெற்றவர்களுக்குப் பரிசு அளித்ததாகும்.

9, 10 தேதிகளில் இந்த விழாவுக்குப் பூர்வாங்கமாக பாரதி பாடல் போட்டி நடந்தது. அதற்குச் சிறுவர் சிறுமியர் சுமார் நூறு பேர் வரையில் வந்து போட்டியில் தங்கள் பாட்டுத் திறனைக் காட்டினார்கள். பாட்டுப் போட்டிக்கு ஸ்ரீ கே. பாலசுப்ரமணிய ஐயர் எம்.எல்.ஸி., சங்கீத கலாநிதி ஸ்ரீ மூசிரி சுப்ரமணிய ஐயர், காயனபடு ஸ்ரீ சரஸ்வதிபாய் ஆகியவர்கள் நீதிபதிகளாக இருந்து பரிசுக்கு உரியவர்களைத் தேர்ந்தெடுத்தார்கள்.

பெரியவர் போட்டியில் முதல் பரிசான தங்க மெடலைப் பெற ஸ்ரீமதி டி. பட்டம்மாளும், சிறுவர் போட்டியில் முதல் பரிசைப் பெற செஞ்சி ராமசேஷன், குமாரி ஆர். பத்மாவதி ஆகிய இருவர்களும் தகுதி வாய்ந்தவர்கள் என்று தேர்ந்தெடுக்கப் பட்டிருந்தனர்.

இரண்டாவது பரிசுக்கு எம். ஈ. சுப்பிரமணியம், எம். எஸ். வஸந்தா, கே. சுப்ரமணியம், எல். சரோஜா, வி. எஸ். வெங்கடராமன், பி. ராஜலக்ஷ்மி, ஆர். மீனாட்சி, ஜி. ராஜரத்தினம் ஆகியவர்கள் தேர்ந்தெடுக்கப் பட்டிருந்தனர்.

பரிசு பெற்றவர்களுக்குச் சபையோர் முன்னிலையில் தங்க மெடலும், வெள்ளிக் கோப்பைகளும், வெள்ளி டம்ளர்களும் வழங்கப்பட்டன.

இவர்களில் பலர் பிரசங்கங்களுக்கு இடையிடையே மேடைக்கு வந்து பாரதி பாடல்களைப் பாடிப் பரிசுகளைப் பெற்றுச் சென்றனர்.

இரண்டு நாள் விழாவிலும் எதிர்பார்த்ததற்கு மேல் ஜனக்கூட்டம் சேர்ந்து விட்டது. பந்தலில் அவரவர்களுக்கென்று ஒதுக்கப்பட்டிருந்த இடவரையறை எல்லாம் போய்த் தலைவர்கள் உள்பட, எல்லோரும் நெருக்கி அடித்துக் கொண்டு உட்கார வேண்டியதாயிற்று. பலர் பக்கத்தில் இருந்த மரத்தின் மேலும் மதிள் சுவரின் மீதும் நிற்க வேண்டியதாயிற்று. இவற்றையெல்லாம் தாண்டித் தெருவெல்லாம் ஜனங்கள் நிறைந்து இருந்தனர். இப்படி இவர்கள் சலிப்பில்லாமல் குதூகலத்துடன் கூடியிருந்ததற்குக் காரணம் பாரதி விழாவை வெறும் பேச்சு விழாவாகச் செய்யாமல் உண்மையான கலை விழாவாகவே செய்திருந்ததுதான். பாரதி விழா நடத்தினால் அதை எப்படி நடத்த வேண்டும் என்பதற்கு ஒரு எடுத்துக் காட்டாக இந்த ஆண்டு பாரதி விழா நடந்தது என்று சொல்லலாம்.

பேச்சும் சங்கீதமும் கலந்தே இருந்தது. பேச்சுகளுக்கு நடுவில் ஸ்ரீ எஸ். வி. பார்த்தசாரதி, ஸ்ரீமதி இந்திரா பார்த்தசாரதி முதலியவர்கள் பாரதியார் பாடலையும் பாரதியார்மீது இயற்றியுள்ள அஞ்சலிப் பாடல்களையும் பாடி விழாவுக்கு ஜீவன் அளித்து மக்களை மெய்மறக்கச் செய்து வந்தனர்.

விழாத் தலைவரின் அன்றைய தலைமைப் பிரசங்கம் நடந்தவுடன் ஸ்ரீ பி. ஸ்ரீ ஆச்சார்யா, ஸ்ரீ க. சந்தானம், ஸ்ரீ ம. பொ. சிவஞான கிராமணியார், ஸ்ரீ பெரியசாமித்தூரன், பேராசிரியர் அ. சீனிவாசராகவன், ஸ்ரீ நாரண துரைக்கண்ணன், ஸ்ரீ திருலோக சீதாராம், சங்கு சுப்பிரமணியம் முதலானோர் பேசினார்கள். உணர்ச்சி பொங்கப் பேசினார்கள். மெய் சிலிர்க்கப் பேசினார்கள். பாரதியாரைப் பற்றிப் பிரசங்கமாரி பொழிந்தார்கள். பாரதியார் பாட்டுக்கு நல்ல பதிப்பு வேண்டும் என்று கோரினார்கள். தபால் தலையில் பாரதியின் திரு உருவம் வேண்டும் என்றார்கள். பாரதிக்கு விழாக் கொண்டாடுவதுடன் நில்லாமல் தமிழால் ஆட்சி நடத்த வேண்டும் என்று விரும்பினார்கள்.

விழாவிற்குப் புத்துயிரும் புது உணர்ச்சியும் அளித்தது விழாவில் ஸ்ரீ டி. கே. ஷண்முகம் கோஷ்டியார் பங்கெடுத்துக் கொண்டு பாரதியின் பாடலை இசை நாடகமாக நடித்ததுதான். 'ஆங்கிலேயனும் தேச பக்தனும்' என்ற பாரதியார் பாடலை இசை நாடகமாக அமைத்து ஸ்ரீ டி. கே. ஷண்முகம் வ. உ. சி.யாக வந்தார். ஸ்ரீ தட்சிணாமூர்த்தி கலெக்டர் துரையாக வந்தார். கலெக்டர் துரையும் வ. உ. சி.யும் பாரதியார்பாடலைப் பாடிய போது கச்சாலீசுவரர் கோவிலையும், விழாப் பந்தலையும், அரண்மனைக்காரன் தெருவையும் தாண்டி விழா மேலே மேலே உயர்ந்துவிட்டது. "வந்தே மாதரம்! வந்தேமாதரம்! வந்தேமாதரம்!" என்று மூன்று முறை வ. உ. சி. யாக வந்த ஸ்ரீ டி. கே. ஷண்முகம் முழங்கி, "என்றுயிர் போம் வரை வாழ்த்துவோம்" என்று கம்பீரமாகப் பாடிய போது சபையோர் செய்த உற்சாக ஆரவாரம் ஒரு மறக்க முடியாத காட்சி.

பாரதியின் சத்ரபதி சிவாஜி தன் சேனைகளுக்கு ஆணையிடும் அற்புதக் கட்டத்தை இசை நாடகமாக அமைத்து ஸ்ரீ டி. கே. பகவதி சிவாஜியாகத் தோன்றிக் காளிக்கு வணக்கம் செலுத்திய காட்சி இன்னும் மனத்தை விட்டு அகலவில்லை. சிவாஜி தன் சேனைகளுக்கு உத்தரவிடும்போது எல்லோரும் சிவாஜியின் காலத்துக்கே போய்விட்டார்கள். கடைசியாக எல்லாருமாகச் சேர்ந்து "ஜயபேரிகை கொட்டடா!" என்று பாடும்போது அதற்கு ஏற்ற முறையில் அமைந்த பின்னணி வாத்திய சங்கீதமும் சேர்ந்து வெற்றி முரசு கொட்டியது போலவேயிருந்தது. அந்தச் சமயங்களில் எல்லாம் சபையோர் பாரதியார் பாடலில் உள்ள சக்தியை உணர்ந்து அனுபவித்து மெய்மறந்து போனார்கள்.

இதற்குப் பிறகும் மேற்கூறிய அறிஞர்களில் சிலர் பேசினார்கள். இந்தப் பேச்சுகளுக்கு ஸ்ரீ கே. பாலசுப்ரமண்ய ஐயர் தலைமை தாங்கி விழாவை மிகச் சிறப்பாக நடத்தி முடித்தார்.

குமாரி ராஜலக்ஷ்மி "வாழிய செந்தமிழ்" பாட பாரதியின் அமரஜயந்தி முடிவுக்கு வந்தது.

** ** **

இரவு ஸ்ரீ கொத்தமங்கலம் சுப்பு தம் கோஷ்டியாருடன் பாரதியார் சரித்திரத்தை உருக்கத்தோடு கதா காலக்ஷேபம் செய்தார். நாட்டுப் பாட்டாகவும், நல்ல தமிழ்ப் பேச்சாகவும் அவர் செய்த காலட்சேபம் மயிர்க்கூச்செறியும்படி இருந்தது. இந்தக் காலட்சேபங்களைத் தமிழ்நாட்டுக் கிராமங்களில் எல்லாம் வைத்துக் கேட்கும்படி செய்தால் பாரதியைப் பற்றியும் தமிழைப் பற்றியும் மக்கள் நினைத்து அதற்காகப் பாடு பட்டு அவர்கள் மனப்பண்பு உயரும் என்பதில் ஐயமில்லை.

இந்த மகத்தான விழா நடப்பதற்கு அவசியமான பொருளுதவியின் பொறுப்பை ஏற்றுக் கொண்டு உதவிய ஸ்ரீ எம். சண்முகம் செட்டியாருக்கும் அவருடைய நண்பர்களுக்கும் தமிழ் மக்களின் சார்பாக வாழ்த்துக் கூறுகிறேன்.

ஸ்ரீ சின்ன அண்ணாமலையும் பாரதி சங்கத்தின் காரியதரிசி ஸ்ரீ அனந்தாச்சாரியும் செய்த கைங்கரியத்தை விவரிக்க வார்த்தைகளே இல்லை.

ஆதிசிவன் பெற்று எத்தனை எத்தனையோ புலவர்கள் வளர்த்துக் கடைசியில் கவியரசர் பாரதியாரால் காப்பாற்றப்பட்ட தமிழ் அன்னை என்றென்றும் மகோன்னதமான சிம்மாதனத்தில் வீற்றிருக்கப் போகிறாள் என்பது இந்த ஆண்டு பாரதி விழாவினால் நிச்சயமாயிற்று.

வாழ்க தமிழ் மொழி! வளர்க பாரதியின் நாமம்!

# கிணற்றடியிலே




கோமதி மாமியை ஒருவாரமாகக் கிணற்றடி மகாநாட்டில் காணவில்லை. அந்த ஒரு வாரமும் கிணற்றடி மாதர் மகாநாட்டு அங்கத்தினர்களுக்கு ரொம்பவும் வெறிச்சென்று இருந்தது. ஒன்றும் சுவாரஸ்யப்படவில்லை. இந்த நிலைமைக்கு முற்றுப்புள்ளி வைப்பதற்கு வந்தாற்போல் அன்று கோமதி மாமி, கிணற்றடிக்கு வந்து சேர்ந்தாள்.

"வாங்கோ, வாங்கோ! எப்போ ஊரிலே யிருந்து வந்தாற்போலே?" என்று கேட்டுக் காமு மாமி வரவேற்றாள்.

"இன்றைக்குக் காலையிலே தானடியம்மா, வந்தேன்" என்றாள் கோமதி மாமி.

"பெரிய 'டூர்' போலே யிருக்கு இந்தத் தடவை!" என்றாள் கொஞ்சம் இங்கிலிஷ் படித்த லச்சுமி.

"அதெல்லாம் ஒன்றுமில்லையடியம்மா! என் பெண் வீட்டுக்கும், பிள்ளையாண்டானிடமும்தான் போய்விட்டு வந்தேன்! அவ்வளவுதான்!" என்றாள் கோமதி மாமி.

"பெண் எப்படி யிருக்கிறாள்? மாப்பிள்ளை எப்படி?" என்று கேட்டாள் லச்சுமி.

"பெண் ரொம்பக் கொடுத்து வைச்சவள். தங்கமான அகமுடையான்! அவர்கள் இரண்டு பேரும் ஒருத்தருக் கொருத்தர் ஒட்டிக் கொண்டு குடித்தனம் பண்ணுகிற அழகைப் பார்க்க ஆயிரங் கண்கள் வேணும்! காலையிலே பெண் காப்பி போட அடுப்பை மூட்டிவிடுவாள்; அதற்குள் மாப்பிள்ளை காப்பி மிஷினில் காப்பிக் கொட்டை அரைத்துக் கொண்டு வந்து கொடுத்து விடுவார். காப்பி சாப்பிட்டானதும் வெந்நீர்த் தவலையை எடுத்து வந்து, வெந்நீர் அடுப்பை மூட்டி விடுவாள்! அது நன்றாகப் பற்றிக் கொள்வதற்குள் வெந்நீர்த் தவலையில் பத்துக் குடம் ஜலம் கிணற்றிலிருந்து இழுத்துக் கொண்டு வந்து கொட்டி விடுவார் மாப்பிள்ளை. அப்புறம் மார்க்கெட்டுக்குப் போய்க் காய்கறி வாங்கி வந்து, அவள் குளிச்சுவிட்டு வருவதற்குள் பாங்காய்க் காய் கறியை அருவாள்மணையில் நறுக்கிக் கொடுத்துவிடுவார். வேறு ஏதாகிலும் சாமான் வேண்டுமானாலும், கடையில் போய் வாங்கி வந்து பொட்டலத்தைப் பிரித்து அந்த அந்த டப்பாவில் அந்தச் சாமானைப் போட்டுப் பத்திரமாக மூடி வைத்து விடுவார். மொத்தத்திலே பெண்ணுக்கு ரொம்ப ரொம்ப ஒத்தாசையாக இருக்கிறார். பெண் ரொம்ப பாக்யசாலி! ரொம்பப் புண்ணியம் செய்தவள்."

"அது சரி, பிள்ளையாண்டான் குடித்தனம் எப்படி?" என்று கேட்டாள் லச்சுமி.

"அந்த லட்சணத்தை ஏன் கேட்கிறீர்கள்? கொஞ்சங் கூடப் பார்க்கச் சகிக்கவில்லை. அவள் எள்ளு என்றால் இவன் எண்ணெயாக நிற்கிறான். காலமே காப்பிப் பொடி மிஷினிலே காப்பிப் பொடி அரைக்கிறது இவன் வேலை; வெந்நீர் அண்டாவுக்குத் தண்ணீர் இழுத்துக் கொட்டுவது இவன் வேலை; மார்க்கெட்டுக்குப் போய்க் காய்கறி வாங்கி வந்து நறுக்கித் தருவது இவன் வேலை. ஒரு புருஷப் பிள்ளையாகப் பிறந்து இதெல்லாம் செய்கிறது என்றால் அவன் துரதிர்ஷ்டத்தைப் பற்றி என்ன சொல்வது? அவன் தலையெழுத்தைப் பற்றித்தான் என்ன சொல்வது. என் மனசுதான் இப்படி அவமானம் தாங்க மாட்டாமல் துடிக்கிறதே தவிர, அவனுக்குச் சூடுசுரணை யிருப்பதாகவே தெரியவில்லை! அவன் ஹூன் ஹீ ஹீ என்று இளிச்சுக் கொண்டே எல்லாக் காரியங்களையும் செய்கிறான்! இப்படியொரு பித்துக்குளியா என் வயிற்றிலே பிறந்து தொலைக்கணும்? என்ன பாவம்! என்ன பாவம்!!" என்று அங்கலாய்த்தாள் கோமதி மாமி.

எப்படி எங்கள் ஊர் மாதர் மகாநாட்டு ஒருநாள் நடவடிக்கை?



# முத்து வளையல்

ராமப்ரியா

ஹேமா அன்று ஒரே ஆனந்தமயமா யிருந்தாள். தன்னைச் சிங்காரித்துக் கொள்வ தில் முழு கவனமும் செலுத்தி யிருந்தாள். ஏற்கெனவே நல்ல அழகியான அவள் இப்பொழுது தாய்மையை அடையப் போவதால் இன்னும் பூரணப் பொலிவோடு விளங்கினாள். வெள்ளை மைசூர் சில்க் புடவையும் அதற்கேற்றாற் போல அணிந்திருந்த கறுப்புப் பட்டுச் சோளியும் அவள் அழகைப் பன்மடங் காக்கின. அலங்கார மெல்லாம் முடிந்தபின் அன்று காலை அவள் கணவன் ஆசையாக வாங்கித் தந்த முத்து வளையை அணிந்து கொண்டாள். தங்கத்தினால் கடைந் தெடுத்தாற்போல் அழகாக இருந்த அவள் கைக்கு முத்து வளையல்கள் இன்னும் அதிக சோபையை அளித்தன. நிலைக் கண்ணாடியின் முன் நின்று பார்த்தாள். தன்னுடைய பிரதிபிம்பத்தின் மேல் அவளுக்கே மட்டற்ற திருப்தியா யிருந்தது. வாசற் கதவைத் தட்டும் சப்தம் கேட்டுத் தன் கணவன் ரகுதான் ஆபீஸிலிருந்து வந்து விட்டானோவென்று ஆவலாகக் கதவைத் திறந்தாள்.

ஹேமாவின் சிநேகிதி நிர்மலாதான் கதவைத் தட்டினது. "வா! நிர்மலா!" என்று அவளை உள்ளே அழைத்துச் சென்றாள். "என்ன ஹேமா! அலங்காரங்க ளெல்லாம் பலமாக இருக்கிறதே! எங்கேயாவது புறப் படுகிறாயோ?" என்று கேட்டவள் ஹேமாவின் கையிலிருந்த முத்து வளையைப் பார்த்து, "இது எப்போ வாங்கினாய், ஹேமா? ரொம்ப நன்றாக யிருக்கிறதே!" என்றாள்.

"நான் ரொம்ப நாளாக ஒரு முத்து வளை வேண்டுமென்று ஆசைப்பட்டுக் கொண்டிருந்தேன். யாரோ வக்கீல் ரங்கநாதனாமே! அவர், இவரிடம் முத்து வளை ஒரு ஜோடி விற்கப் போவதாக நேற்று, தற்செயலாகக் கிளப்பில் கூறினாராம். இவர் எனக்கு வாங்கலாமென்ற எண்ணத்தோடு யாரிடமாவது வளையைக் கொடுத்தனுப்பச் சொன்னாராம். இன்றைக்குக் காலையில் அந்த வக்கீலின் குமாஸ்தா, இந்த வளையலைக் கொண்டு வந்தார். வேலைப்பாடு ரொம்ப நன்றாக இருக்கிறது. என் கைக்கும் அளவெடுத்துச் செய்தது போலிருக்கிறது. எங்கள் இருவருக்கும் பிடித்துவிட்டது. என் வளைகாப்பின் போதே முத்துவளை வேண்டுமென்று ஆசைப் பட்டேன். அது நடக்கவில்லை. விலை நானூற்றைம்பதையும் நாளைக்குக் கொடுத்து விடுவதாகச் சொல்லிவிட்டார். விலையும் மலிவுதான்! இல்லையா நிர்மலா?" என்று மூச்சு விடாமல் சொன்னாள் ஹேமா.

"வக்கீல் ரங்கநாதன் வீட்டு வளையா...!" என்று தனி ராகத்தோடு கேட்டாள் நிர்மலா.

"உனக்கு அந்த வக்கீல் வீட்டவர்களைத் தெரியுமா, நிர்மலா?" என்றாள் ஹேமா.

"எனக்கு அவர்களெல்லாரையும் நன்றாகத் தெரியும். அதனால்தான் அவர்கள் வீட்டு வளையா என்று கேட்டேன்."

"ஏன் ஒரு மாதிரி இழுத்தாற் போலக் கூறுகிறாய்! விலை அதிகமென்று தோன்றுகிறதா?" என்றாள் ஹேமா.

"விலை அதிகமென்று நான் சொல்லவில்லை. என்னைக்கூட இந்த வளை விலைக்கு வேண்டுமா என்று கேட்டார்கள். நான் வேண்டாமென்று சொல்லி விட்டேன்" என்றாள் நிர்மலா.

"ஏன் வேண்டாமென்று சொல்லிவிட்டாய்? முத்துக்களில் ஏதாவது சூது இருக்குமென்று சந்தேகிக்கிறாயோ? என்னத்தையோ மனசில் வைத்துக் கொண்டு மென்று விழுங்குகிறாய்! என்னவென்று சொல்லமாட்டாயா, நிர்மலா?"

"நீ ஆசைப்பட்டு வாங்கிவிட்டாய்? நான் என்னத்தைச் சொல்வது?" என்று தயங்கினாள்.

"நீ இப்படிப் பீடிகை போடுவதைப் பார்த்தால் எனக்குப் பயமாக இருக்கிறதே! எதுவா யிருந்தாலும் உள்ளதைச் சொல்லி விடு; பரவாயில்லை" என்றாள் ஹேமா, கட்டுக் கடங்காத ஆவலோடு.

"வளை ரொம்பவும் நேர்த்தியான வேலைப்பாடுகளுடன் கூடியதுதான். வக்கீல் ரங்கநாதன் தம்முடைய அருமைப் பெண்ணுக்கு வளைகாப்புக்காகப் பார்த்துப் பார்த்துச் செய்தார் இந்த முத்து வளையை. அந்தப் பெண் துரதிர்ஷ்ட வசமாகக் குறைப் பிரசவத்தில் இறந்து போய் விட்டாள். அதில் மனமுடைந்து போன வக்கீல் அந்தப் பெண்ணின் நகைகளை விற்கிறார். 'ஆகி' வராத வளை வேண்டாமென்று நான் சொல்லி விட்டேன். நீயும்தான் பூரண கர்ப்பமா யிருக்கிறாய்! இந்த வளை உனக்கு என்னத்துக்கு? இதே மாதிரி புதிதாகச் செய்து கொள்ளேன்". என்று சொல்லி முடித்தாள் நிர்மலா.

ஹேமாவின் சந்தோஷ மெல்லாம் கணப் பொழுதில் இருந்த இடம் தெரியாமல் மறைந்து விட்டது. "ஹூம்! அப்படியா செய்தி! இந்த விஷயங்களெல்லாம் எனக்குத் தெரியவே தெரியாதே! அந்த வக்கீல் எங்களை ஏமாற்றி விட்டார் போல் இருக்கிறது. இவர் வந்தவுடனே இதைத் திருப்பிக் கொடுத்து விடச் சொல்கிறேன்"

என்றாள். ஹேமாவின் கணவன் ரகு அப்பொழுது வந்து விடவே நிர்மலா விடை பெற்றுக் கொண்டு சென்றாள்.

*

“என்ன ஹேமா, வளை போட்டுக் கொண்டாயா? நன்றாக இருக்கிறதா? எங்கே காண்பி பார்ப்போம்! இன்றைக்கு என்ன அம்பாளுக்கு முத்து சார்த்தி அலங்காரமா? ஒரே அமர்க்களமாயிருக்கிறதே! சாக்ஷாத் சரஸ்வதி தேவிபோல இருக்கிறாயே!” என்று குதூகலத்தோடு கேட்டுக் கொண்டு வந்த ரகு ஹேமாவின் கலவரமடைந்த முகத்தைப் பார்த்துத் திடுக்கிட்டான்

“என்ன ஹேமா? உன் உடம்புக்கென்ன? ஏன் ஒரு மாதிரி இருக்கிறாய்?” என்றான்.

“உடம்புக்கு ஒன்றுமில்லை. அந்த வக்கீல் நம்மை ஏமாற்றி விட்டார். இந்த வளையல் ‘ஆகி’ வராத வளையலாம். இதை இப்போதே திருப்பிக் கொடுத்து விடுங்கள்” என்று கூறி, நிர்மலா தன்னிடம் சொல்லிய விவரங்களையெல்லாம் ஹேமா ரகுவினிடம் கூறினாள்.

“இந்த விஷயங்கள் ஒன்றையும் அந்த வக்கீல் சொல்லவேயில்லையே! இதே மாதிரி இரண்டு ஜதை வளையல் இருப்பதனால் ஒன்றைக் கொடுக்கப் போகிறேனென்று சொன்னார். இப்போதே இதைக் கொடுத்து விடுகிறேன். சொல்ல மறந்து விட்டேனே! உங்க அப்பா கிட்டேயிருந்து கடிதம் வந்திருக்கிறது. அடுத்த புதன்கிழமை நாள் நன்றாக இருப்பதால், அவர் வந்து உன்னை அழைத்துப் போகிறாராம். சீமந்தம் ஆனவுடனேயே அழைத்துப் போக வேண்டுமாம். என்னுடைய வேண்டுகோளுக்காக உன்னை இத்தனை நாள் இங்கே விட்டு வைத்திருந்தாராம். பிரசவம் கழித்துத்தான் வருவாய்! அது வரையில் உன்னைப் பிரிந்து இருக்க வேண்டுமே! நீ இச் சமயத்தில் ஆசைப் பட்டதை வாங்கிக் கொடுத்து உன்னைச் சந்தோஷப் படுத்த வேண்டுமென்பது என்னுடைய ஆசை. உன் பிறந்தகத்திலேயே இந்த மாதிரி முத்துவளை செய்து கொள். நான் பணம் அனுப்பி விடுகிறேன். திருச்சியில்தான் பெரிய கடைகள் இருக்கின்றனவே! இந்த முத்து வளையைக் கழற்றி விடு. அது உனக்கு வேண்டாம். கொண்டு போய்க் கொடுத்து விடுகிறேன்” என்று சொல்லி வளையல்களை எடுத்துச் சென்றான் ரகு.

வக்கீல் ரங்கநாதன் வீட்டுக்குப் போய் அவரிடமே அந்த முத்து வளைகளைத் திருப்பிக் கொடுத்து விட்டான் ரகு. “ஏன் ஸார், திருப்பிக் கொண்டு வந்து விட்டீர்கள்! வளையல்கள் ரொம்பப் பிடித்திருக்கிற தென்றும் உங்கள் மனைவியின் கைக்கு அளவெடுத்தாற் போல இருக்கிறதென்றும் சொன்னீர்களே! விலை அதிகமென்று கொண்டு வந்து விட்டீர்களா?” என்று வக்கீல் கேட்டார்.

ரகு உண்மையை ஒளிக்காமல் கூறி விட்டு, “ஸார்! இந்த மாதிரி யாரோ சொன்னதால் என் மனைவி கலவரப்பட்டு விட்டாள். மேலும் அவள் இப்போது கர்ப்பமாயிருக்கிறாள். சந்தோஷமாயிருக்க வேண்டிய இந்தச் சமயத்தில் இதையே நினைத்துக் கொண்டு ஏதாவது நேர்ந்து விட்டால் என்ன செய்வதென்று கொண்டு வந்து விட்டேன். பெண்கள் மனசே விசித்திரமானது. பாருங்கள்! நீங்கள் ஒன்றும் வித்தியாசமாக நினைத்துக் கொள்ளாதீர்கள்!” என்றான்.

“நீங்கள் உண்மையை ஒளிக்காமல் கூறி விட்டதில் எனக்குத் திருப்தி. இதை நான் வேண்டுமென்று மறைக்கவில்லை. என் பெண்ணுக்கு அற்பாயுசு. நான் கொடுத்து வைத்தது அவ்வளவுதான். இந்த முத்து வளையினால் அவள் போய் விட்டாளென்று சொல்ல முடியுமா! அதனாலென்ன? பரவாயில்லை! என்னுடைய தம்பி திருச்சியில் புதிதாகக் கடை வைத்திருக்கிறான். அவன் இன்று இவ்விடம் வந்திருக்கிறான். அவனே இதை வேண்டுமென்றான். உங்களுக்குக் கொடுத்தாகி விட்டதென்றேன். இப்பொழுது அவனிடம் கொடுத்து விற்றுக் கொள்கிறேன்” என்றார் ரங்கநாதன்.

ஹேமாவின் தகப்பனார் குறித்த நாளில் வந்து ஹேமாவைப் பிரசவத்துக்குத் திருச்சிக்கு அழைத்துச் சென்றார். அவள் முத்து வளைக்கு ஆசைப்பட்டது, ரகு வாங்கிக் கொடுத்தது, அதை நிர்மலா சொன்ன செய்தியால் திருப்பிக் கொடுத்தது ஆகிய விவரங்களை ஹேமா அவள் தாயாரிடம் சொன்னாள். ஹேமாவின் தாய் உடனே தன் கணவனிடம், “குழந்தை முத்து வளைக்கு ஆசைப்பட்டு ஏதோ ஆகி வராத வளையை வாங்கி விட்டாளாம். இந்தச் சமயத்தில் அதெல்லாம் பார்த்து வாங்க வேண்டாமோ? நல்லவேளையாக ஹேமாவின் சிநேகிதி ஒருத்தி சொன்னதின் பேரில் மாப்பிள்ளை அதைத் திருப்பிக் கொடுத்து விட்டாராம். நாம் வளைகாப்புக்குக் கூடச் சாதாரண வளைதான் செய்து கொடுத்தோம். இங்கே நல்ல வளை



புதிதாக ஒன்று குழந்தைக்குச் செய்து கொடுத்து விடுவோம்!'' என்றான்.

"இங்கே புதிதாக 'நியூ ஜுவல்லரி மார்ட்' என்ற நகைக் கடை ஒன்று வந்திருக்கிறது. அங்கே எல்லாம் ரொம்ப நன்றாகவும் நாணயமாகவும் இருக்கிறதாம். அங்கிருந்து நாலைந்து நினுசுகள் கொண்டுவரச் சொல்லுகிறேன். ஹேமா! உனக்கு எது பிடிக்கிறதோ அதை எடுத்துக் கொள்!'' என்று சொல்லிவிட்டு வெளியே சென்றார் ஹேமாவின் தந்தை சபேசய்யர். அன்று சாயங்காலமே "நியூ ஜுவல்லரி மார்ட்டி''லிருந்து முத்து வளையல்களாகக் கொண்டு குவித்து விட்டார். ஹேமா எல்லாவற்றையும் ஆவலோடு பார்த்துக் கொண்டே வந்தவள் ஒரு ஜதையைப் பார்த்தவுடன், "அம்மா, இங்கே பாரேன்! நான் வாங்கின வளையல் இதேமாதிரி தானம்மா! இது அதைவிடப் புதிதாகையால் புதிய மெருகுடன் பள பள வென்று மின்னுகிறது. கடைசியில் நான் ஆசைப்பட்ட நினுசே கிடைத்து விட்டது. அதேமாதிரி வேலைப்பாடுகள்! என்ன ஆச்சரியம், அம்மா! இதன் விலை என்ன என்று கேள்!'' என்று சந்தோஷம் பொங்கக் கூறினாள்.

"விலையைப் பற்றி உனக்கென்ன? நீ ஆசைப்பட்டதை எடுத்துக் கொள்!'' என்றாள் ஹேமாவின் தாய்.

ஹேமா உடனேயே ரகுவுக்கு, அதே மாதிரி முத்து வளையல் அறுநூறுக்குத் தன்னுடைய தகப்பனார் வாங்கிக் கொடுத்து விட்டாரென்றும் ரொம்பவும் நன்றாக இருக்கிறதென்றும் கடிதம் எழுதி விட்டாள். ரகுவும் ஹேமாவின் அபிலாஷை பூர்த்தியானதில் சந்தோஷமடைந்தான்.

★

ஹேமாவுக்குப் பெண் குழந்தை பிறந்தது. சபேசய்யர் ரகுவுக்கு உடனே தந்தியடித்து விட்டார். ஆபீஸில் லீவு கிடைக்காமையால் ரகுவுக்கு உடனே போக முடியவில்லை. புண்யாகவாசனத்துக்கு மட்டும் போனான். ரகு தனக்கு ரிசர்வ் செய்து வைத்திருந்த இரண்டாவது வகுப்பு வண்டியில் வக்கீல் ரங்கநாதன் உட்கார்ந்திருந்தார். ரகுவைப் பார்த்த வுடனே, "வாருங்கள் ஸார்! 'மிஸ்டர் ரகுராமன்' என்று ரிஸர்வேஷனில் போட்டிருந்ததைப் பார்த்ததும் யாரோ என்றல்லவா நினைத்தேன். திருச்சி வரை பேச்சுத் துணைக்குத் தெரிந்த மனிதராயிற்று. என்ன விசேஷம் திருச்சியில்?'' என்றார்.

"திருச்சிதான் என் வேட்டகம். என் மனைவி பிரசவித்துப் பெண் குழந்தை பிறந்திருக்கிறது. நாளை மறுநாள் புண்ணியாவசனம். அதற்குப் போகிறேன். நீங்கள் கேஸ் விஷயமாகப் போகிறீர்களோ?'' என்றான் ரகு. பிறகு திடீரென்று நினைத்துக் கொண்டு, "ஏன் ஸார்! அந்த முத்து வளையை என்ன செய்தீர்கள்? யாருக்காவது விற்று விட்டீர்களா?'' என்று கேட்டான் ரகு.

"அந்த முத்து வளை, மற்றும் சில நகைகள் எல்லாவற்றையும் திருச்சியில் நகைக் கடை வைத்திருக்கும் என் தம்பி வெகு லாபகரமாக விற்றுவிட்டான். அவன் வியாபாரத்தின் நுணுக்கங்களை அறிந்தவன். அந்த நகைகளை நன்றாக மெருகு போட்டு வெல்வெட் கேஸ்களில் பதித்துப் பார்ப்பவர்களுக்குக் கவர்ச்சிகரமாக்கி நான் சொன்ன விலையை விட இருநூறு ரூபாய் அதிகம் வைத்து விற்றுவிட்டான். அந்த முத்து வளை அறுநூறு ரூபாய்க்குப் போய் விட்டதாம். இப்பொழுது அவனிடம்தான் போகிறேன். என் பெண்ணுக்கு ஆயுசு இல்லை, இப்பொழுது அந்த முத்து வளை வாங்கினவர்களுக்கு எல்லாம் கைகூடி வரலாம். எல்லாம் நம் மனசுதான் காரணம். நான் இன்னும் ஒரு வாரம் திருச்சியில் இருப்பேன். என் தம்பியின் வீடு கடைக்குப் பின் பக்கத்திலேயேதான். அவசியம் வாருங்கள்!'' என்றார் வக்கீல்.

"உங்கள் தம்பியின் விலாசம் என்ன?'' என்றான் ரகு.

"நாகசாமி, நியூ ஜுவல்லரி மார்ட், பெரிய கடை வீதி, தெப்பக்குளம்!'' என்று சொன்னார் வக்கீல். ரகுவும் அந்த விலாசத்தைக் குறித்து வைத்துக் கொண்டான்.

திருச்சி ஜங்ஷன் வந்தது. ரகுவின் மாமனார் ஸ்டேஷனுக்கு வந்திருந்தார். ரகு வக்கீலிடம் பிறகு சந்திப்பதாகக் கூறி விடை பெற்றுக் கொண்டு மாமனாருடன் வீட்டுக்குப் போனான். ஹேமாவின் அறைக்குக் குழந்தையைப் பார்ப்பதற்கு வெகு ஆவலுடன் சென்றான். ஹேமா மகிழ்ச்சி பொங்க ரகுவை வரவேற்று, "குழந்தையை மடியில் வைத்துக் கொள்ளுங்கள். தத்ரூபம் உங்கள் சாயலாகவே இருக்கிறாள், இல்லையா?'' என்று உவகை ததும்பக் கூறினாள். செலுலாயிட் பொம்மை போல் இருக்கும் குழந்தையைத் தடவிய வாறு, "ஹேமா, இளைத்துப் போய் விட்டாயே! உடம்புக்கு ஒன்றுமில்லாமல் இருக்கிறாயா? சுகப் பிரசவம்தானே? எல்லாம் நல்லபடியாக முடிய வேண்டுமே என்று நான் பட்ட கவலை கொஞ்ச நஞ்சமில்லை'' என்று கூறிக் கொண்டே அவள் கைகளை வருடினான் ரகு. "ஹேமா! குழந்தைக்கு, கைக்குக் காப்பும் கழுத்துக்குச் சங்கிலியும் ரெடிமேடாகவே வாங்கலாமென்று பார்க்கிறேன். இங்கேயே வாங்கட்டுமா?'' என்றான்.

"ஓ! இங்கே புதிதாக ஒரு கடை வைத்திருக்கிறார்கள்! அங்கேதான் எனக்கு முத்து வளை வாங்கிக் கொண்டேன். ரொம்பவும் நாணயஸ்தர். கைராசிக்காரராகவும் இருக்கிறார் அந்தக் கடைக்காரர். அவர் கையால் முத்துவளை கொடுத்த வேளை எனக்குச் சுகப்பிரசவமாகித் தங்க விக்ரஹம் போல் குழந்தையும் பிறந்தது என்று அம்மா

சொல்லுகிறான். அந்தக் கடையிலே குழந்தைக்குச் சங்கிலியும் வாங்கலாம், நீங்கள் அந்த முத்து வளையைப் பார்க்கவில்லையே?" என்று சொல்லி விட்டு ஹேமா தன் தாயாரைக் கூப்பிட்டு முத்து வளையை ரகு பார்க்க விரும்புவதாகச் சொன்னாள். ஹேமாவின் தாய் அந்த முத்து வளையை வெல்வெட் பெட்டியுடன் மாப்பிள்ளையிடம் கொடுத்தாள். ரகு அதை வாங்கிப் பார்த்தவாறு, "ஹேமா, ஹேமா! நாம் முன்பு வாங்கித் திருப்பிக் கொடுத்தோமே அதேமாதிரி வேலைப்பாடுகளுடன் கூடியதுதான் இந்த வளையும். இது புதிதாகையால் பளபளவென்று மெருகுடன் மின்னுகிறது. அந்தக் கடையின் விலாசமென்ன?" என்றான் ரகு.

"நியூ ஜுவல்லரி மார்ட்" என்று கடையின் பெயர் என்றாள் ஹேமா.

"என்ன!" என்று தூக்கி வாரிப் போட்டவாறு கேட்ட ரகு தன்னைச் சமாளித்துக் கொண்டு, "அந்தக் கடை எங்கே யிருக்கிறது?" என்று கேட்டான்.

"பெரிய கடை வீதியில் இருக்கிறது. அதன் சொந்தக்காரர் பெயர் நாகசாமி. ரொம்ப தங்கமான மனிதர். அவர் கடையிலேயே நம் குழந்தைக்கு முதன் முதலில் சங்கிலி வாங்குங்கள்!" என்றாள் ஹேமா. ரகுவுக்கு ஆச்சரியம் தாங்கவில்லை. வக்கீல் ரங்கநாதனுடைய சாக்ஷாத் தம்பியின் கடையிலேயே அதே முத்து வளையை, ஆனால் இருநூறு ரூபாய் அதிகம் கொடுத்து வாங்கி யிருக்கிறாள் ஹேமா என்பது ரகுவுக்கு இப்போது 'பளிச்' சென்று புரிந்தது.

அந்த வளையை வக்கீலிடமிருந்து வாங்கின போது அது அவருடைய இறந்து போன பெண்ணின் வளை என்று தெரிந்தவுடன் தானும் அந்தப் பெண் மாதிரி இறந்து போய் விடுவோமோ என்று பயந்து உடனே திருப்பிக் கொடுத்து விடச் சொன்னாள். இப்பொழுது அதே வளையை அவருடைய தம்பியிடமிருந்து வாங்கி அந்த வளையினால்தான் பெற்றுப் பிழைத்தேன் என்கிறாள். வக்கீல் ரங்கநாதன் சொன்னது போல எல்லாவற்றிற்கும் மனசுதான் காரணம் என்று இவ்வாறெல்லாம் சிந்தித்துக் கொண்டிருந்தான் ரகு.

"யோசனை பலமா யிருக்கிறதே! பெண் பிறந்து விட்டதே, வரன் தேடணுமே என்ற யோசனை போலிருக்கிறது!" என்று கூறிக் கட கட வென்று சிரித்தாள் ஹேமா. சந்தோஷமா யிருக்கும் இந்தச் சமயத்தில் 'இந்த வளை பழைய வளையேதான்' என்று சொல்ல வேண்டா மென்று தீர்மானித்த ரகு, "யோசனை ஒன்றுமில்லை. முத்துவளை ஆகி வந்த வளையாகி விட்டது. அதே கடையில் குழந்தைக்கும் சங்கிலி வாங்கிவிட வேண்டுமென்று நினைத்துக் கொண்டேன்" என்றான் ரகு. "என் மனசில் இருப்பதையே நீங்களும் சொல்லுகிறீர்கள்!" என்று பெருமையாகச் சொன்னாள் ஹேமா. அப்போது அவள் உள்ளம் சந்தோஷத்தால் பூரித்தது.



தேசத்தின் தலைசிறந்த தியேட்டர்

*************

பம்பாயிலுள்ள
பிரபல
லிபர்ட்டி
ஸினிமாவில்
உலகப் புகழ் பெற்ற
ஜெர்மன்
தயாரிப்பான
பவர் - கிளாங்பிலிம்
ப்ரொஜக்ஷன்
ஸவுண்ட்
எக்விப்மென்ட்
உபயோகிக்கிறார்கள்

*************

# Bauer KLANGFILM

தரமான படம், சுகமான ஒலி என்று உங்கள் தியேட்டருக்கு நல்ல பெயர் அளிக்க உத்தரவாதம்

○●○

விவரங்களுக்கு எழுதுங்கள் :

## இன்டர்நேஷனல் டாக்கி எக்விப்மென்ட் கோ., லிமிடெட்

18, மவுண்ட் ரோடு, மதராஸ் - 2

டெலிபோன் : 86282 தந்தி : ஸவுண்ட்ஹெட்

தலைமை ஆபீஸ் : பம்பாய். கிளைகள் : டெல்லி, கல்கத்தா, நாக்பூர், ஹைதராபாத்.




# ஒரு நாள் ராஜா

ரா.நா

## 2. ஹாஸனின் மயக்கம்

ஹாஸனின் பேச்சிலிருந்து அவனுடைய பழைய நண்பர்களைப் பற்றியும், அவர்கள் உண்டு களித்துவிட்டு மறைந்ததைப் பற்றியும், இதன் விளைவாகத் தினம் ஒரு அன்னியனை உபசரிக்கத் திட்டமிட்டதைப் பற்றியும் கேட்டுக் கலிபா கலகலவென்று சிரித்தான். ஒரு இரவைத் தமாஷாகக் கழிக்க உதவிய ஹாஸனுக்கு ஏதாவது பிரதி உபகாரம் செய்ய எண்ணி, "நண்பரே! உங்களால் ஒரு இரவு மிகவும் இன்பமாகக் கழிந்தது. இவ்வளவு மகிழ்ச்சியளித்ததற்கு உங்களுக்கு என்னாலான உதவியைச் செய்ய விரும்புகிறேன். எவ்விதத்தில் உதவி புரியலாம் என்று தெரிவியுங்கள்" எனக் கேட்டான்.

இதற்கு ஹாஸன் பதில் கூறினான்:

"நண்பரே! ஆண்டவன் அருளால் எனக்குப் போதிய சொத்துக்கள் இருக்கின்றன. ஆகையால் எனக்கு எவ்விதப் பண உதவியும் தேவையில்லை. ஆனால் அருகில் ஒரு இமாம் (மசூதியின் பூசாரி) இருக்கிறான். அவனுக்குத் துணையாக நான்கு கிழவர்கள் இருக்கின்றனர். அவர்கள் தங்கள் கடமைகளை முறைப்படி செய்வதில்லை. தங்கள் இஷ்டப்படி ஜனங்கள் நடக்காவிட்டால் அவர்களைப் பல விதத்தில் துன்புறுத்துகின்றனர். ஜனங்களுக்கு அவர்கள் உதவி செய்ய வேண்டியது போக அவர்களைக் கண்டால் ஜனங்களெல்லாம் நடுங்கும்படி நடந்து கொள்கிறார்கள். நான் மாத்திரம் ஒரு நாளைக்குக் கலிபாவாயிருக்க முடியுமானால் அவர்களைக் கடுமையாகத் தண்டித்து அவர்கள் மக்களை மேலும் துன்புறுத்தாமல் இருக்கும்படி செய்வேன்."

இதைக் கேட்ட கலிபா சொன்னான்:

"நண்பரே! இதென்ன பிரமாதம்? கலிபா எனக்கு மிகவும் வேண்டியவர். அவரிடம் கூறி உங்கள் விருப்பம் பூர்த்தியாகும்படி செய்கிறேன். நாம் வெகு நேரம் பேசிக் கொண்டிருந்து விட்டோம். இனி சற்று இளைப்பாறலாமோ?"

ஹாஸனும் சம்மதிக்கவே இருவரும் படுக்கை யறைக்குச் சென்றனர். புறப்படு முன் கலிபா ஒரு கோப்பைப் பழ ரஸத்தை ஹாஸனுக்கு அளித்தான். அதை ஹாஸன் அருந்தியதனால் படுத்தவுடன் கண் மயங்கித் தூங்கிவிட்டான். ஹாஸன் பேச்சில் ஆழ்ந்திருந்த சமயம் கலிபா ஒரு தூக்க மருந்தைக் கோப்பையிலுள்ள ரஸத்தில் கலந்திருந்ததனால்தான் ஹாஸன் அவ்வளவு சீக்கிரம் தூங்கிவிட்டான். அவன் தூங்கியவுடன் கலிபா தன்னுடன் வந்த வேலைக்காரனைக் கூப்பிட்டு ஹாஸனைத் தூக்கிக்கொண்டு தன்னைப் பின்தொடரும்படி கட்டளையிட்டான். ஹாஸன் வீட்டில் யாரும் பாராமல் அவர்கள் புறப்பட்டனர். நள்ளிரவாயிருந்ததால் தெருவில் ஜனநடமாட்டமில்லை. ஆகையால் சத்தமின்றி கலிபாவும் வேலைக்காரனும் அரண்மனை வந்தடைந்தனர். அரண்மனையின் பின்புறக் கதவு வழியாக உள்ளே நுழைந்தனர். ஹாஸனைக் கலிபா தன்னுடைய படுக்கை யறையில் தன் மெத்தையில் வைக்கச் செய்தான். உடனே அரண்மனையிலுள்ள பிரபுக்களையும், சேவகர்களையும் வரவழைத்துப் பின் வருமாறு கூறினான்:

"காலையில் நான் எழுந்தவுடன் என்னை வணங்கி, வரவேற்கும் யாவரும் இந்தப் படுக்கையில் இருக்கும் இளைஞன் எழுந்திருக்கும்போது அம்மாதிரியே மரியாதை செய்ய வேண்டுமென்பது என் விருப்பம். எனக்கு என்னென்ன பணி செய்வீர்களோ அதை அவனுக்குச் செய்ய வேண்டும். அவன் சொற்படி யாவரும் நடக்க வேண்டும். அவன் பேச்சுக்கு மறு பேச்சு யாரும் பேசலாகாது. அவனுடன் பேசும்போதெல்லாம் கலிபாவாகிய என்னிடம் பேசுவது மாதிரியே மரியாதையாகவே பேச வேண்டும். தானே கலிபா என்று அவன் நம்பும்படி நீங்கள் ஒவ்வொருவரும் நடந்துகொள்ள வேண்டும். அற்ப விஷயத்தில் கூட அவனுக்கு அதிருப்தி ஏற்படலாகாது."

இதைக் கேட்ட அரண்மனைப் பிரமுகர்கள் ஆச்சரிய மடைந்தனர். தங்கள் எஜமான் ஏதோ தமாஷ் செய்ய விரும்புகிறார் என்பதை அறிந்து கொண்டனர். இந்த ஏற்பாடு தங்களுக்கும் மகிழ்ச்சி யளிக்குமாதலால் கலிபாவின் கட்டளைப்படி நடப்பதாக வாக்களித்தனர். பிறகு கலிபா ஒரு மறைவான இடத்துக்குப் போய் விட்டான். அங்கிருந்து கொண்டு அரண்மனையில் நடப்பவற்றைக் கவனிக்கத் தீர்மானித்தான்.

சூரியோதய மாயிற்று. கலிபா எழுந்திருந்து காலைப் பிரார்த்தனைக்குச் செல்ல வேண்டும். பிரபுக்களும் சீமாட்டிகளும் ஹாஸன் அருகில் வந்து, "கலிபா பிரபுவே! ஆஸ்திகர்களை ரக்ஷிப்பவரே! தாங்கள் பிரார்த்தனைக்குச் செல்லும் நேரம் ஆகிவிட்டது. தயவு செய்து எழுந்திருங்கள்!" என்று கைகூப்பி வாய் பொத்திக் கொண்டு வேண்டினர்.

பேசும் சத்தம் கேட்டு ஹாஸன் விழித்துக் கொண்டான். சுற்றுமுற்றும் பார்த்தான். தன் அறையில் இல்லாமல் உல்லாஸமான அறையில் படுத்திருப்பதைக் கண்டு ஆச்சரியப் பட்டான். பளிச்சென ஒளி வீசும் பட்டுப் படுதாக்கள், கண்ணைக் கவரும் வர்ணச் சித்திரங்கள், மேஜைமீதெல்லாம் தங்கத் தட்டுகள், வெள்ளிக் கூஜாக்கள்—இவை யெல்லாம் அவன் உள்ளத்தைக் கொள்ளை கொண்டன. எழுந்து தன் படுக்கையைப் பார்த்தான். மிருதுவான மெத்தை மீது சரிகை வேலைப்பாடுகளுடன், முத்தும் வைரமும் சரம் சரமாக அமைந்த போர்வை விரிக்கப்பட்டிருந்ததைக் கண்டான். படுக்கை யறையில் சிறு மேஜைமீது நவரத்தினக் கற்கள் இழைத்த கலிபாவின் மணிமுடி காணப் பட்டது. கண்ணைக் கசக்கிக் கொண்டு பார்த்தான். தன்னைச் சுற்றி ஆடம்பர உடை அணிந்த பிரபுக்களும், அழகிற் சிறந்த பெண் மணிகளும் தன்னுடைய உத்தரவுக்குக் காத்திருப்பதைக் கண்டான்.

இவ்வளவையும் கண்டு ஆச்சரியம் தாங்க முடியவில்லை ஹாஸனுக்கு. ஒரு வேளை இதெல்லாம் கனவோ என்று எண்ணினான். அச்சமயம் ஒரு பிரபு சற்று முன் வந்து, "பிரபோ! வழக்கமாக இந்த நேரத்துக்குள் தாங்கள் பிரார்த்தனைக்குக் கிளம்பி விடுவீர்கள், நேரமாகிறது, புறப்படுங்கள்" என்று பணிவாகக் கூறினார். மனிதர் பேச்சுக் குரல் கேட்பதால் விழித்துக்கொண்டு தான் இருப்பதாக நிச்சயித்துக் கொண்டான்.

எதிரிலிருந்த அழகிய பெண்கள் சற்று முன் வந்து இனிய இசை பாடினர். இந்த இசை ஹாஸனுக்கு இனிமையா யிருந்ததால் மறுபடியும் படுக்கையில் சாய்ந்து கொண்டு, கண்களை மூடிக் கொண்டு கானத்தை ரஸித்தான். இந்தச் சமயம் அரண்மனை மெய்காப்பாளர் தலைவன் மெஸ்ரார் முன் வந்து, "ஆஸ்திகர்களின் அன்பனே! பிரார்த்தனைக் காலம் கடந்து விட்டது. ராஜாங்க காரியங்களைக் கவனிக்க வேண்டிய காலம் நெருங்கி விட்டது. தர்பாரில் தங்களை எல்லோரும் எதிர்பார்ப்பார்கள். தயவு செய்து எழுந்திருந்து வாருங்கள்" என்றான்.

ஹாஸன் மெஸ்ராரை முறைத்துப் பார்த்தான். "என்னை ஏன் 'ஆஸ்திகர்களின் அன்பனே' என்றும் 'மேன்மை தங்கிய மன்னனே' என்றும் அழைக்கிறாய்? நீ நினைப்பது தவறு. உன்னை எனக்குத் தெரியவே தெரியாது" என்று சற்றுக் கண்டிப்பான குரலில் சொன்னான்.

ஆனால் மெஸ்ரார் இதனால் அயர்ந்துவிடவில்லை. "நான் சொன்னது தவறில்லை. நான் உங்களுடைய விசுவாச முள்ள அடிமை என்பதை மறந்து விட்டீர்களா? எத்தனை வருஷகாலமாக உங்களுக்குப் பணிவிடை செய்து வந்திருக்கிறேன்? நீங்கள் ஏதோ கெட்ட கனவு கண்டிருக்க வேண்டும். அதனால்தான் இவ்வாறு பேசுகிறீர்கள்" என்று சமாதானம் கூறினான்.

இதைக் கேட்ட ஹாஸன் படுக்கையில் சாய்ந்து கொண்டு கலகல வென்று சிரித்தான். ஆனாலும் நம்பிக்கை ஏற்படவில்லை. எதிரிலிருந்த கறுப்பு வேலைக்காரன் ஒருவனை அழைத்து, "நான் யார்? சொல் பார்க்கலாம்!" என்றான். அதற்கு அந்த வேலைக்காரன், "நீங்கள்தான் மேன்மை தங்கிய கலிபா ஹாருன் அலரஷித்!" என்றான்.

"அடே, கருப்பு தடியா! நீ சொல்வது நிஜமல்ல!" என்று கூறிவிட்டு ஒரு அழகிய பெண்ணை அழைத்து அவளிடம் தன் கையை நீட்டி, "என் விரல் நுனியைக் கடி பார்க்கலாம். நான் தூங்குகிறேனா விழித்திருக்கிறேனா என்று பார்க்கலாம்" என்றான்.

உண்மைக் கலிபா இதை யெல்லாம் பார்த்துக் கொண்டிருந்தான். அவனைத் திருப்தி செய்ய வேண்டும் என விரும்பிய அந்தப் பெண் கொஞ்சங்கூடச் சிரிக்காமல் ஹாஸன் அருகில் வந்து அவன் விரலை வெடுக்கென்று கடித்து விட்டாள். இதைப் பார்த்த சபையினரெல்லாரும் உள்ளூறச் சந்தோஷப் பட்டார்கள்.

(தொடரும்)



பைல் பீன்ஸ்
மலச்சிக்கலையும் அசதியையும்
போக்குகிறது.

மலச்சிக்கல், வயிற்றுக்கோளாறு, மற்றும் உங்கள் உடலை வாட்டி வதைத்து சக்தியை இழக்கச்செய்யும் நோய்களைத் தடுக்கிறது. டாக்டர்கள் சிபார்சு செய்து அங்கீகரிக்கும் பைல் பீன்ஸை இன்று முதல் நேமமாக உபயோகித்து கட்டுதிட்டமாகவும், ஆரோக்கியமாகவும், வாலிபத்தோற்றத்தோடும் இருக்க முயலுங்கள்.




வாழ்க்கையை இன்பமாகக் கழியுங்கள்-டாக்டர்கள் அங்கீகரித்துள்ள பைல் பீன்ஸை உட்கொள்ளுங்கள்.

## பைல் பீன்ஸ்

எல்லா மருந்து வியாபாரி களிடமும் கிடைக்கும்.

மதராஸிற்கு சோல் ஏஜண்டுகள்: நீநா & கோ., பார்க்டவுன்

---

கவியரசர் டாகூர் காந்தி மகாத்மாவின் பெருமையையும் அவர் இந்தியாவுக்கு ஆற்றி யிருக்கும் அருந்தொண்டையும்

# மகாத்மா காந்தி

என்ற நூலில் அழகாக விளக்கியிருக்கிறார்

விலை அணா எட்டு
(தபால் செலவு தனி)

சசிதேவி எழுதிய

# விஜயா

முதலிய கதைகள்

விலை ரூ. 2-8-0
(தபால் செலவு தனி)

•

கிடைக்குமிடம்

**கல்கி காரியாலயம்**
கீழ்ப்பாக்கம் :: சென்னை

---

# 'SCISSORS'



1900



1925



1952




மூன்று தலைமுறைகளாகப் பிரசித்தி பெற்றவை

5¼ அணவுக்கு 10

S-220 B.




# ராணி மாதவி

கி.ரா. கோபாலன்



## 5. ராணி வந்தாள்!

அன்று அந்த மோட்டார் விபத்து நடக்கவில்லையானால் அப்பொழுது வள்ளி கையில் உறங்கிக் கொண்டிருக்கும் குழந்தை அந்த நேரத்தில் பட்டக்காரர் மாளிகையில் பட்டு மெத்தை போடப்பட்டிருக்கும் தொட்டிலில் உல்லாசமாகத் தூங்கிக் கொண்டிருக்கும். இந்தக் குழந்தையை இடம் மாற்ற வேண்டுமென்ற காரணத்திற்காகவே தான், விதி அதனுடைய பெற்றோர்களைப் படுகொலைக்குள்ளாக்கி இருக்க வேண்டும் என்று வள்ளிக்குப் பட்டது. இதை நினைக்கும்பொழுது அவளுக்கு மறுபடியும் குழந்தையின் முகத்தைப் பார்க்க வேண்டுமென்ற ஆவல் ஏற்பட்டது. அந்தக் குழந்தை மெதுவாகத் தன் கண்களைத் திறந்தது. எவ்வளவு குறு குறுப்பான கண்கள்! அவள் ஆசையோடு அதன் கன்னத்தை மெதுவாகத் தட்டினாள். அது ரோஜா மொக்குப் போன்ற தன் சிறிய அதரங்களைத் திறந்து அழத் தொடங்கியது. "ஏப்பா! எதற்கு உனக்கு இவ்வளவு கோபம்? நானும் உனக்கு அம்மாதான்......" என்று சொல்லி அதைத் தன் மார்போடு அணைத்துக் கொண்டாள் வள்ளி.

சூரியன் மறைந்து இருள் சூழக் கூடிய நேரம் நெருங்கிவிட்டது. இன்னும் எவ்வளவு தூரம் அவள் நடப்பாள்! அன்று இரவு தங்குவதற்கு வசதியான இடத்தை அவள் கண்கள் துருவித் துருவித் தேடிக் கொண்டிருந்தன. சிறிது தூரத்தில் ஒரு குளமும் அதற்குச் சமீபத்தில் ஒரு சிறிய பிள்ளையார் கோவிலும் இருப்பதைக் கண்டாள். இது அவளுடைய அதிர்ஷ்டம் என்றுதான் சொல்ல வேண்டும். அன்று இரவைப் பத்திரமாகக் கழிப்பதற்கு அந்த இடம் அவளுக்குப் போதுமானதாகப் பட்டது. அவள் அந்தப் பிள்ளையார் கோவிலின் வெளி மண்டபத்தில் போய் உட்கார்ந்தாள். காலையிலிருந்து நெடுந் தூரம் அவள் அலைந்து திரிந்ததனால் களைப்பும் சிரமமும் எப்படிப்பட்டதென்று அப்போதுதான் அவளுக்குத் தெரிந்தது.

சோர்வும் சோகமும் அடைந்திருந்த அவள் உள்ளத்திற்குத் திடீரென்று ஏற்பட்ட இந்த நிம்மதியும் சந்தோஷமும் சிறிது பயத்தோடுகூடியதாகத்தானிருந்தன. இந்த உலகம் அவளையும் அந்தக் குழந்தையையும் துளிக்கூட இரக்கம் காட்டாமல் பிரித்து விடுமோ என்று அவள் அஞ்சினாள். அப்படி ஏதாவது நேர்ந்தால் அப்புறம் அவள் ஒரு நிமிஷம் கூட இந்த உலகத்தில் உயிர் தரித்திருக்கக் கூடாது என்று தீர்மானித்தாள். இந்த அபாயத்தை எண்ணித்தான் அவள் மனம் பிரலாபித்துக் கொண்டிருந்தது. ஆனால் இயற்கையாக அவளுக்குள்ள துணிவுதான் அடிக்கடி அவள் மனத்தைப் பின்னடையாமல் செய்தது. குழந்தையைச் சுற்றி மூடப்பட்டிருந்த தன் புடவைத் தலைப்பை எடுத்துவிட்டு அதை உற்றுப் பார்த்தாள். அந்தக் குழந்தைக்கு அணிவிக்கப் பட்டிருந்த விலை உயர்ந்த பட்டுச் சட்டையைத் தொட்டுப் பார்த்தாள். அந்தச் சிறிய சட்டை கையினாலேயே தைக்கப் பட்டிருந்தது. அந்தக் குழந்தையின் கழுத்தில் மெல்லிய சங்கிலி ஒன்றும் அந்தச் சங்கிலியில் பெரிய பச்சைக் கல் புதைக்கப்பட்ட பதக்கம் ஒன்றும் பிணைக்கப் பட்டிருந்தது. குழந்தையின் கழுத்தில் கிடந்த அந்தச் சங்கிலியை மெதுவாகக் கழற்றித் தன் புடவைத் தலைப்பில் முடிந்து இடையில் செருகிக் கொண்டாள். ஏழை நாடோடிப் பெண்ணாகிய அவள் வளர்க்கும் குழந்தைக்கு எதற்காக இவ்வளவு விலையுயர்ந்த நகையும், சட்டையும்! அந்தச் சட்டையை மெதுவாகக் கழற்றினாள். வழவழப்பாக இருந்த அந்தப் பட்டுத் துணியை மெதுவாகக் கையால் தொட்டுப் பார்த்தாள். பாவம்! அந்தச் சட்டையை எவ்வளவு ஆவலோடும், ஆசையோடும் அந்தக் குழந்தையின் தாய் தைத்தாளோ! வள்ளி கூடத் தனக்குப் பிறக்கப் போகும் குழந்தையை எண்ணிச் சில துணிகளைச் சேர்த்துச் சட்டைகள் தைத்து வைத்திருந்தாள். அவைகளெல்லாம் போத்தியம்மாளின் குடிசையிலிருக்கின்றன. அவள் சிறிது நேரம் அந்தப் பட்டுச் சட்டையைப் பார்த்துவிட்டு ஒரு பெருமூச்சு விட்டுக்கொண்டே மனமில்லாதவள் போல் அதைப் பந்தாகச் சுருட்டிக் குளத்தில் வீசி எறிந்தாள்.

அன்று காலையிலிருந்து அவள் ஒன்றுமே சாப்பிடவில்லை. ஒருபுறம் பசியும், மற்றொருபுறம் நடந்து வந்த களைப்பும் சேர்ந்து கொண்டன. குழந்தையைப் புடவைத் தலைப்பினால் போர்த்தித் தன் மார்போடு அணைத்துக் கொண்டு "பிள்ளையாரப்பா! நீதான் காப்பாற்றவேணும்!" என்று சொல்லிப் படுத்தாள். உடனே பிள்ளையார் அனுக்கிரகம் செய்து விட்டது போல் அவளை அறியாமல் நித்திரை அவளை அழுத்தியது.

சூரிய வெளிச்சம் முகத்தில் படவே வள்ளி திடுக்கிட்டு எழுந்தாள். நன்றாகப் பொழுது விடிந்து விட்டது. விடியற்காலையிலேயே எழுந்து தன்

பிரயாணத்தைத் துவக்க வேண்டுமென்று அவள் நினைத்தாள். ஆனால், பாவம்! அவளையறியாமல் நெடு நேரம் வரையில் தூங்கி விட்டாள். தூக்கத்திலிருந்து விழித்தவுடன் முதலில் அவள் கவனம் குழந்தையிடம்தான் சென்றது. அது அவளை ஒட்டினாற்போல் நிம்மதியாகத் தூங்கிக் கொண்டிருந்தது. அவள் குழந்தையை அங்கேயே விட்டு விட்டுக் குளத்தில் இறங்கிப் பல் துலக்கி முகம் கைகால்களைக் கழுவிக் கொண்டு கரை ஏறினாள்.



பிறகு குழந்தையை யெடுத்துப் புடவை முந்தானையினால் மூடி மார்போடு அணைத்துக் கொண்டு அவ்விடத்தை விட்டு சிறிதும் தாமதியாமல் நடக்கலானாள்.

முதல் நாள் முழுவதும் சாப்பிடாததினால் பசியின் கொடுமை அதிகமாக இருந்தது. கண்கள் இருண்டு காதை அடைத்தது. அந்தப் பாதையில் அப்பொழுது சிறிதுதான் ஜன நடமாட்டம் இருந்தது. அவளுக்கு ஆகாரம் கிடைக்கக்கூடிய இடம் அங்கு ஏது! அங்கிருந்து கும்பகோணம் எத்தனை தூரமோ! பசியோடு அவள் எவ்வளவு தூரம் நடப்பாள்! எப்படியோ சிரமத்துடன் இரண்டு மைல் தூரம் நடந்து விட்டாள். திடீரென்று அந்தப் பாதையிலிருந்து ஒரு கிளைப்பாதை பிரிந்தது. நேர் வழியாக இருந்த அந்தப் பாதையிலிருந்து ஒரு கிளைப் பாதை பிரியவே வள்ளிக்குச் சிறிது தடுமாற்றம் ஏற்பட்டது. கும்பகோணம் செல்லும் சரியான பாதை எது வென்று அவளுக்குத் தெரியவில்லை. யாராவது மனிதர்களிருந்தால் கேட்கலாமென்று சுற்றிலும் பார்த்தாள். சற்றுத் தூரத்தில் ஒரு பெரிய ஆலமரம் இருந்தது. அந்த மரத்தடியில் மாடு மேய்க்கும் சிறுவர்கள் ஐந்தாறு பேர் விளையாடிக் கொண்டிருந்தனர். ஒரு கிழவி மரத்தோரமாக உட்கார்ந்திருந்தாள். அவளுக்குப் பக்கத்தில் ஒரு சிறிய கூடை வைக்கப் பட்டிருந்தது. அவளிடம் சென்று விசாரித்தால் சரியான பாதையைச் சொல்லுவாள் என்ற எண்ணத்தில் அவளை நெருங்கி, "கும்பகோணம் போகிற பாதை எது, பாட்டி!" என்று கேட்டாள். கிழவி அவளை உற்றுப் பார்த்துவிட்டு, "கும்பகோணம் போறியா...! திருவிழாவுக்கா!" என்றாள் வள்ளி கேட்ட கேள்விக்குப் பதில் சொல்லாமல்.

வள்ளி "ஆமாம்" என்றாள்.

கிழவி உடனே "நீ யார், அம்மா! எந்த ஊரு! குடியானவப் பெண்தானே!" என்ற கேள்விகளை வரிசையாக அடுக்கினாள்.

வள்ளி அந்தக் கிழவியைப் பற்றிய வரையில் ஓரளவு புரிந்து கொண்டாள். அவள் இட்டிலி சுட்டு விற்கும் கிழவி. வயல் வெளியில் வேலை செய்யும் குடியானவர்களும், மாடு மேய்க்கும் சிறுவர்களும், களைப்போடு வரும் வழிப்போக்கர்களும் அவளிடம் இட்டிலி வாங்கிச் சாப்பிடுவது வழக்கம். கூடையில் இட்டிலியுடன் அவள் அந்த ஆல மரத்தடியில் உட்கார்ந்திருக்கும்பொழுதே அதைத் தெரிந்து கொண்டு விட்டாள் வள்ளி. இந்தப் பசி நேரத்தில் அந்தக் கிழவி அவளுக்கு இரண்டு இட்டிலி கொடுத்தால் எவ்வளவு நல்லது! ஆனால் காசு இல்லாமல் எப்படித் தருவாள்! வள்ளியிடம் காசு ஏது! சிறிது நேரம் கிழவியோடு பேச்சுக் கொடுத்து அவளுடைய நன்மதிப்பைப் பெற்று விட்டால் அவளுக்காக இரக்கப் பட்டு இரண்டு இட்டிலி கொடுக்க மாட்டாளா! வள்ளி கேட்ட கேள்விக்கு அந்தக் கிழவி உடனடியாகப் பதில் சொல்லாமல் வேறு ஏதோ பேச்சுக் கொடுத்தது வள்ளிக்குச் சிறிது சாதகமாகவே முடிந்தது. அவள் அந்தக் கிழவிக்குச் சமீபமாக உட்கார்ந்து, "நான் ஒரு நாடோடிப் பெண். கழைக் கூத்தாடிகளைச் சேர்ந்தவள். திருவிழாவுக்காக எங்கள் ஜனங்களெல்லாம் கும்பகோணம் போயிருக்கிறாங்க! அவங்களைப் பார்க்கப் போறேன்!" என்றாள்.

"அப்படியா! ஐயோ, பாவம்! இந்தப் பாதையிலே தனியாகவா போறே! உன் கையிலே என்ன, குழந்தையா!" என்றாள் கிழவி.

"ஆமாம், பாட்டி! இந்தக் குழந்தைக்காகத்தான் அவங்களோடு சேர்ந்து போகாமலிருந்தேன்!" என்றாள் வள்ளி.

கிழவி வள்ளியின் கையிலிருந்த குழந்தையைப் பார்த்துவிட்டு வள்ளியின் முகத்தை ஆச்சரியத்தோடு பார்த்தாள். அவளுடைய பார்வையில் ஏதோ சந்தேகமும் சம்சயமும் எழுந்தது போலிருந்தது. "என்ன, பாட்டி! அப்படிப் பார்க்கிறே!" என்று கேட்டாள் வள்ளி.

"ஒன்றுமில்லே! உங்களுக்குக் கூட இவ்வளவு லட்சணமாகக் குழந்தை பிறக்கிறதே!" என்றாள் கிழவி மிகவும் அதிசயத்துடன்.

"ஏன், பாட்டி! பிறக்கக் கூடாதா! நான் அழகா யில்லையா!" என்றாள் வள்ளி.

கிழவி சிரித்தாள். "நீ அழகாகத்தா னிருக்கிறே! உன்னைப் பார்த்தால் நல்ல குடிப்பிறந்தவளாத் தோணுதே தவிர நாடோடியாகத் தோணலை. உனக்கு இப்படிக் குழந்தை பிறந்தால் அதிசயமில்லைதான். அது கிடக்கட்டும். உங்கள் ஜனங்களுக்குப் பச்சிலை மூலிகைகள் எல்லாம் தெரியுமாமே! உனக்கு ஏதாவது தெரியுமா!" என்று கேட்டாள் கிழவி.

"கொஞ்சம் கொஞ்சம் தெரியும், பாட்டி! பூச்சிக் கடி, பூரான் கடி, கண்டமாலை, காமாலை,



கண்ணெரிச்சல் இதுக்கெல்லாம் கூடப் பச்சிலே மருந்து சொல்லுவேன்!'' என்றாள் வள்ளி.

''அப்படியா! நீ மகராசியா யிருக்கணும். இதோ பாரு! ஏதோ பூச்சிக் கடிச்சிது, அப்படியே புண்ணாகி ஒரே நமைச்சலா யிருக்குது!'' என்று தன் முழங்கையைக் காட்டினாள் கிழவி.

வள்ளி அவள் கையை உற்றுப் பார்த்துவிட்டு, ''சரி! இதற்கு நான் சரியான மருந்து சொல்லுகிறேன். வெளியே மாத்திரம் சொல்லாதீங்க!'' என்று அவள் காதோடு ஏதோ சொன்னாள்.

கிழவி அதைக் கேட்டுச் சந்தோஷமடைந்து, ''அவ்வளவுதானே! நான் செய்து கொள்ளுகிறேன். சரி, நீ ரொம்பக் களைப்பா யிருக்கிறாய். இளம்பிள்ளைக்காரி. இந்தா, இரண்டு இட்டிலி தரேன், சாப்பிடு!'' என்று சொல்லி ஒரு இலையில் இரண்டு இட்டிலியை வைத்து வள்ளியிடம் கொடுத்தாள்.

வள்ளியின் பசி தீர அந்த இரண்டு இட்டிலிகளே போதுமானதாக இருந்தன. அதைச் சாப்பிட்டு விட்டு, ''சரி, பாட்டி! கும்பகோணம் போகிற பாதை எது என்று கேட்டேனே, அதைச் சொல்லவில்லையே!'' என்றாள்.

''இதோ. இந்தப் பாதை பிரியுது பாரு! அதோடு போனால் மூன்று கல்லு. ஒரு நொடியிலே போய் விடலாம்'' என்றாள் கிழவி.

வள்ளி கிழவியிடம் விடைபெற்றுக் கொண்டு குழந்தையுடன் அவள் காட்டிய பாதையில் நடந்தாள். அவள் கையிலிருந்த குழந்தை மிகவும் சிறிதாக இருந்தது. ஆனால் அது பிறந்து இரண்டு அல்லது மூன்று வாரமாவது இருக்குமென்று அவளுக்குத் தோன்றியது. அவள் வயிற்றில் அந்தக் குழந்தை பிறந்திருந்தால் அவ்வளவு சிறிதாக இருக்குமென்று யாரும் நம்ப மாட்டார்கள். ஆனால் குழந்தையை ஆவலோடு எதிர்பார்க்கும் தங்கள் கூட்டத்தினர் அதையெல்லாம் பெரிதாகக் கருதிச் சந்தேகப்படுவார்கள் என்று அவள் கனவில் கூட நினைக்கவில்லை.

அவள் கும்பகோணம் வந்து சேர்ந்தாள். ஆனால் தங்கள் கூட்டத்தினர் எங்கே தங்கியிருக்கிறார்கள் என்று அவள் எப்படிக் கண்டு பிடிக்க முடியும்! மகத் திருவிழா! ஊர் முழுவதும் ஜனச் சந்தடியோடு இருந்தது. எங்கு பார்த்தாலும் ஜனக் கூட்டம். பலவிதமான கடைகள். பந்தல் அலங்காரங்கள், கோயிலுக்குக் கோயில் மேளச் சப்தம், ஸ்வாமி புறப்பாடு! இவைகளை யெல்லாம் ஒவ்வொன்றாகப் பார்த்துக் கொண்டே வந்தாள் வள்ளி. அந்தக் கூட்டத்தில் தன்னுடைய மனிதர்கள் யாராவது இருப்பார்கள் என்று அவளுக்குத் தோன்றியது. ஒவ்வொரு கூட்டத்திலும் புகுந்து ஒவ்வொரு முகத்தையும் உற்றுப் பார்த்துக் கொண்டே வந்தாள்.

''ஏ. வள்ளியம்மா!'' என்ற குரல் கேட்டுத் திரும்பிப் பார்த்தாள். சிறிது தூரத்தில் பெத்தண்ணன் நின்று கொண்டிருந்தான். அவனைக் கண்டதும் அவள் மனத்திலிருந்த விசாரமும் குழப்பமும் பனிச்சென்று விலகின. ''மாமா!'' என்று கூப்பிட்டுக் கொண்டே அவனுக்குச் சமீபமாகப் போய் நின்றாள். அவன் வள்ளியின் முகத்தை உற்றுப் பார்த்துக் கொண்டே, ''அப்பாடா! இப்போதுதான் என் மனசு நிம்மதியாச்சு. உன்னைத் தேடச் சொல்லி எங்கே யெல்லாம் ஆளை யனுப்பி இருக்கிறேன், தெரியுமா! அதிருக்கட்டும். உன் கையிலே இருக்கிறது குழந்தை தானே! அது என்ன ராசாவா, ராணியா? உடனே சொல்லு...'' என்று கேட்டான் துடிப்போடும் ஆர்வத்தோடும்.

வள்ளி சிறிது தயங்கினாள். பெத்தண்ணனுக்குக் குழந்தையிடம் உள்ள ஆர்வம் அவள் எப்பொழுதும் அறிந்ததே. ஆனால் அவள் அடைந்த சிரமத்தைப் பற்றி அவனுக்குக் கவலே உண்டா? அவள் சட்டென்று குழந்தையை அவனிடம் காட்டப் பிரியப்படவில்லை. அவள் குழந்தையைக் கெட்டியாகத் தன் மார்போடு அணைத்துக் கொண்டு அவனைக் கர்வத்தோடு பார்த்துக் கொண்டே, ''இது உங்கள் ராணி!'' என்றாள்.

''ராணியா! சந்தோஷம். நாங்களெல்லாம் ஆண் குழந்தை பிறந்தால் நல்லதுன்னு நினைச்சோம். பெண்ணா யிருந்தாலும் பாதகமில்லே. குழந்தையை நீ பத்திரமாக எடுத்துக்கிட்டு வந்ததை எல்லோரும் கேட்டால் எவ்வளவு சந்தோஷப் படுவாங்க, தெரியுமா! ஆனாலும் நீ இப்படி செய்யக்கூடாது, வள்ளி! நான் உன்னைப் போத்தியம்மா விடம் ஒப்படைச்சு விட்டு வந்திருக்கும்போது நீ தனியாக ஓடிப்போகலாமா? இது பைத்தியக்காரத்தனம். இது உனக்கு எவ்வளவு கெடுதல், தெரியுமா! நீ இப்போது குழந்தையோடு வந்ததால்தான் தப்பினாய்! இந்தக் குழந்தைக்கு மாத்திரம் ஏதாவது ஆபத்து ஏற்பட்டிருந்தால் நாங்கள் உன்னை என்ன செய்வோம், தெரியுமா!'' என்றான்.

வள்ளி பெத்தண்ணனின் வார்த்தைகளுக்கு எவ்விதமான பதிலும் சொல்லவில்லை. குற்றவாளி போல் தலை குனிந்த வண்ணம் அவன் எதிரில் நின்று கொண்டிருந்தாள்.

''சரி! வா, போவோம்!'' என்று அவளை அழைத்துக் கொண்டு நடந்தான் பெத்தண்ணன். ''உன்னைத் தேடுவதற்காக ஒவ்வொரு மூலைக்கும் நான் ஆளை அனுப்பி யிருக்கிறேன். நேற்றுக் காலையில்தான் போத்தியம்மா நீ அவளிடம் சொல்லிக் கொள்ளாமல் எங்கேயோ போய் விட்டாய் என்று தகவல் சொல்லி அனுப்பினாள். அவள் கொஞ்சம் பொல்லாதவளாய் இருந்தாலும் நீதான் சகிச்சுப் போகணும். அவள் எங்களை யெல்லாம் எடுத்து வளர்த்தவள். எங்களுக்குத் தாய்போல. நீ செய்த குற்றத்துக்கு உன்னை

மன்னிக்கவே மாட்டான். அவன்கூட இன்று வந்தாலும் வருவான். நான் அவனை வரச்சொல்லி யிருக்கிறேன்'' என்று சொல்லிவிட்டு, "நான் அந்தக் குழந்தையைக் கொஞ்சம் பார்க்கக் கூடாதா!'' என்றான். அவன் கண்களில் ஒரு ஆர்வமும் துடிப்பும் தாண்டவமாடின.

"இனற்று நீரை வெள்ளமா கொண்டுபோயி டும்! குழந்தை இப்போதான் கொஞ்சம் கண்ணை மூடித் தூங்குது. அதைத் தொந்திரவு செய்யக் கூடாது. அப்புறம் நீங்கள் பார்க்கலாம்'' என்றாள் வள்ளி.

"அது சரிதான்! என்னமோ மனசு கேட்கவில்லே. பார்க்கணும் என்று ஒரு ஆவல். அவ்வளவுதான். குழந்தைக்கு நல்ல நினைவு வரும் வரையில் நீதான் அதைப் பாதுகாத்தாகணும். இந்தக் குழந்தை எங்கள் உடமை; எங்கள் ராணி. நாங்கள் எல்லோரும் ராணிக்கு உட்பட்டவங்க. நீ அதை ரொம்ப ஜாக்கிரதையாகக் காப்பாத்தணும். இந்தக் குழந்தையின் கஷ்ட சுகமெல்லாம் உன் கையிலே தானிருக்குது...'' என்றான் பெத்தண்ணன்.

அவனுக்கும் அவனுடைய கூட்டத்தினருக்கும் அந்தக் குழந்தை ராணி என்பதுதான் முக்கியம். ஆனால் வள்ளி அதற்காக அந்தக் குழந்தையைச் சுமந்துகொண்டு வரவில்லை. அது அவளுடைய அன்பிற்குரிய குழந்தை. அந்தத் தாய்ப்பாசம் தான் அவளையும் அந்தக் குழந்தையையும் பிணைத்து வைத்திருந்தது.

பெத்தண்ணனும் வள்ளியும் தங்கள் கூட்டத்தினர் தங்கியிருக்கும் இடத்திற்கு வந்தபோது மாலை வேளை நெருங்கி விட்டது. வள்ளி பெத்தண்ணனோடு அங்கு சென்றபோது எல்லோரும் அவர்களைச் சூழ்ந்து கொண்டனர். "கொஞ்சம் பேசாமலிருங்க. இதோ நான் நம் ராணியைக் கொண்டுவந்து விட்டேன்'' என்றான் பெருமிதத்துடன் பெத்தண்ணன்.

அவனுடைய வார்த்தையைக் கேட்டதும் எல்லோரும் சந்தோஷ ஆரவாரம் செய்தனர்.



"கத்திரிக்காய் விலை ஒரு ரூபாயா? ஹாம்! முந்தா நாள் என் புருஷர் பன்னிரண்டணாவுக்கு வாங்கிக் கொண்டு வந்தாரே!''

"அந்த விலைக்கும் காய் இருக்குது, அம்மா! ஆனால் அது முந்தா நாள் காயாத்தான் இருக்கும்! பரவாயில்லைங்களா?''

அநேகர் அந்தக் குழந்தையைப் பார்க்கத் துடித்தனர். அவர்களுடைய துடிப்பும் ஆர்வமும் வள்ளிக்கு ஏதோ அருவருப்பை உண்டாக்கியது. "நீங்கள் எல்லாம் இப்போ உங்கள் ராணியைப் பார்க்க முடியாது. உங்கள் ராணிக்கு இப்போது நல்ல உறக்கம். தொந்தரவு செய்யக் கூடாது. புரிந்ததா!'' என்று கடிந்து கொண்டாள்.

* * *

அன்று மாலை போத்தியம்மா தன் குடிசை வாசலில் நின்று 'இதெல்லாம் வீண் அலைச்சல்! அவள் எங்கே அகப்படப் போகிறாள்! எனக்குத் தெரியும், அந்த வெட்கம் கெட்ட வள்ளியைத் தேடித் திரிகிறதெல்லாம் பைத்தியகாரத்தனம் என்று! அவள் எங்கு தொலைந்தாளோ! உயிரோடு இருக்கிறாளோ, செத்து விட்டாளோ! அவள் தொலைஞ்சா யாருக்குக் கவலே! அவங்க கவலையெல்லாம் குழந்தையைப் பற்றித்தான். அதுவும் அவள் குழந்தை என் பேரனின் ரத்தத்தில் உதித்ததினால், அது ராணியாக வேண்டும். பாவம்! அவர்களுக்கு ராணி எங்கே அகப்படப் போகிறாள்! வள்ளியை வேண்டுமானாலும் அவர்கள் தேடிக் கண்டுபிடித்து விடலாம். ஆனால் குழந்தையைக் கண்டுபிடித்து விடமுடியுமா! அது என் கையிலே சிக்கிட்டிருக்கே...! எங்கே சல்லடை போட்டுச் சலித்தாலும் குழந்தை அவர்களுக்கு அகப்படப் போவதில்லை. என்ன செய்வார்கள்!' என்று சொல்லித் தனக்குள் கேலியாகச் சிரித்துக் கொண்டாள்.

'நான் என்ன பித்துக்குளியா! இந்தக் கிழவி போத்தியம்மாவை இதுவரையிலே ஒருவரும் பைத்தியக்காரின்னு நினைச்சதில்லே. வள்ளிக்கு ஒரு குழந்தை பிறந்ததே அவங்களுக்குத் தெரியாது. அவளுக்குக் குழந்தை பிறந்ததும் அவளுக்கே தெரியாமல் அதை நான் திருடிக்கொண்டு வந்ததும் யாருக்குத் தெரியும்! அவள் செத்தாளோ, பிழைத்தாளோ! அதைப் பற்றியெல்லாம் நான் ஏன் கவலைப்படணும்! நான் இந்தக் குழந்தையை ராணியாகும்படியாக ஒருநாளும் விடமாட்டேன்' என்று கண்டிப்பாகத் தனக்குள் சொல்லிக் கொண்டாள்.

திடீரென்று அவளுடைய முகக்குறி மாறியது. அவள் படபடப்போடு குடிசைக்குள் நுழைந்து அங்கு தூங்கிக் கொண்டிருந்த குழந்தையைக் கையில் எடுத்துக் கொண்டு வெளியே வந்தாள். அவள் அந்தக் குழந்தையை வெறி பிடித்த மிருகம் போல் ஒரு தடவை பார்த்து விட்டு, "நீ என்னை விட்டு எங்கேயும் தப்பிப் போய்விட முடியாது. உங்க அம்மா மாதிரி உன்னை யார் கண்ணிலும் தப்பித் தவறிக்கூட காட்டிவிட மாட்டேன். அப்படி எவர் கண்ணிலே பட்டாலும் நீ வள்ளிக்குப் பிறந்த குழந்தை இல்லேன்னு சத்தியம் கூடச் செய்து மறுப்பேன். எல்லோரும் அதை நம்பாமல் இருக்க முடியுமா!'' என்றாள்.

ஆழ்ந்த நித்திரையிலிருந்த அந்தக் குழந்தை திடீரென்று விழித்துக் கொண்டு வீறிட்டு அழ ஆரம்பித்தது. பாவம்! அதற்குப் பசி. இரண்டு நாளாய்த் தாய்ப் பாலில்லாத அந்த சிசு என்ன செய்யும்! போத்தியம்மா பலவந்தமாக அதற்கு ஆட்டுப் பாலையும் சர்க்கரைத் தண்ணீரையும் கொடுத்து வந்தாள். அவள் இருதயமற்ற கொடியவள் போலிருந்தாலும் அந்தக் குழந்தையைப் பட்டினி போட்டுச் சாகடிக்க வேண்டுமென்ற எண்ணம் மாத்திரம் அவளுக்கு ஏற்படாதது அதிர்ஷ்டம்தான்.

(தொடரும்)



# பரம்படித்தல்

சரமுள்ள உங்கள் நெல் வயல்களில் பெர்குஸனுடன் இணைக்கப்பட்ட

## மல்டிபர்பஸ் ரோடாவேடரினல்

செய்யுங்கள்

**வறண்ட நிலத்திலும் அது இயங்குவதால் ஓரே தடவை உபயோகத்தில் விதை நிலமும் தயாராகிறது**

பொதுவாக விவசாயத்திற்கேற்ற சாதனம் ● ஓரமாகவுள்ள நிலங்களையும் விவசாயத்திற்குக் கொண்டுவருவதால் படுகை நிலங்களுக்கு மிகவும் ஏற்றது ● வேலிப்புதர் அழித்தல் ● மரம் நடுதல் ● பழத்தோட்டம் வைத்தல் ● நெல் விவசாயம் ● கரும்பு பயிர் செய்தல் ● நிலம் தூர்த்தல் முதலியன




கமானி என்ஜினியரிங் கார்ப்பொரேஷன் லிட்., கமானி சேம்பர்ஸ், பலார்டு எஸ்டேட், பம்பாய்

விற்பனையாளர்கள் :

கமானி என்ஜினியரிங் கார்ப்பொரேஷன் லிட்., 2, ஜோன்ஸ் தெரு, பிராட்வே, மதராஸ்-1

ஸ்டாக்கிஸ்டுகள் : காவினேனி பார்மிங் கார்ப்பொரேஷன், வாசகப்பட்டணம் & குடிவாடா; S. பாபண்ண செட்டி, ராஸ்பேட்; சுந்தரம் சன்ஸ், 42, கிருஷ்ணராயன் குளத்தெரு, மதுரை; பார்மிங் மிஷினரி & சர்வீஸஸ், பெஸன்ட் ரோடு, பக்கிங்ஹாம்பேட் போஸ்ட், விஜயவாடா.

ஸ்டேன்ஸ் மோட்டார்ஸ் (சௌத் இந்தியா) லிமிடெட்
கோயமுத்தூர் - கோழிக்கோடு - உதகமண்டலம் - திருவனந்தபுரம்

வெப்ஸ் பார்ம் மெகானிஸேஷன், 30, மகாத்மா காந்தி ரோடு, பெங்களூர் & மைசூர்
அருண் ஆடோமோபைல்ஸ், 103, அலெக்ஸாண்ட்ரா ரோடு, செகந்திராபாத்

# அந்த ரகசியம்!

டி. ஜி. எஸ்.

இரவு மணி பன்னிரண்டுக்கு மேலாகி விட்டது. தூக்கம் பிடிக்காமல் படுக்கையில் புரண்டு கொண்டிருந்த கேசவனின் காதில் பக்கத்தறையில் ஏதோ லொட் டென்று விழும் சத்தமும் அதைத் தொடர்ந்து ஆள் நடமாடும் சத்தமும் கேட்டது.

"கோபாலன் இந்த வேளையில் என்ன செய்து கொண்டிருக்கிறான்!" என்று ஆச்சர்யத்துடன் போர்வையை உதறித் தள்ளி விட்டு மெதுவாக எழுந்து போய்ப் பார்த்தான் கேசவன்.

உள்ளே பிரகாசமாய் விளக்கு எரிந்து கொண்டிருந்தது. கேசவன் எட்டிப் பார்ப்பதைக் கூடக் கவனியாமல் கண்ணாடி எதிரில் அமர்ந்து வேஷம் போட்டுக் கொண்டிருந்தான் கோபாலன்.

"ரொம்பப் பொருத்தமான வேஷம்தான்" என்று மனத்துக்குள் எண்ணியபடி தன் அறைக்குப் போய்ப் படுத்துக் கொண்டு விட்டான் கேசவன்.

கேசவனின் மைத்துனன் கோபாலன் ஒரு அமெச்சூர் நடிகன். அன்று காலைதான் தங்கையையும் மாப்பிள்ளையையும் பார்த்துப் போக ஊருக்கு வந்திருந்தான். வந்த இடத்திலும் அவனால் சும்மா இருக்க முடியவில்லை. இரவு பன்னிரண்டு மணிக்குத் திடீரென்று அவனுக்குத் தான் நடிக்க வேண்டிய பாகத்தின் நினைவு வந்தது. உடனே கைப் பெட்டியை எடுத்துக் கொண்டு கண்ணாடி எதிரில் உட்கார்ந்து வேஷம் போட்டுக் கொள்ள அமர்ந்தான். அவன் அதில் ஈடுபட்டிருந்த போதுதான் கேசவன் அவனைப் பார்த்தது.

அதற்கு மறுநாட்காலை டிபன் சாப்பிடும் போது, "என்ன கமலா! திடீரென்று உன் வீட்டுக்குத் திருடன் வந்து விட்டால் என்ன செய்வாய்?" என்று கேட்டான் கோபாலன் தன் தங்கையைப் பார்த்து.

"உங்கள் மாப்பிள்ளை இருக்கும் வரை பயமில்லை. கீழே ஏதாவது சத்தம் கேட்டால் மாடி அறைக் கதவை அழுத்தித் தாழ்ப்பாள் போட்டு விடுவார்," என்றாள் கமலா பலமாகச் சிரித்தபடியே.

கோபாலன் "ஹோ, ஹோ!" என்று பெரிதாய்ச் சத்தம் போட்டுச் சிரித்தான்.

இரண்டு நாட்கள் கழிந்தன. மூன்றாம் நாளிரவு பதினொரு மணி சுமாருக்குக் கீழேயிருந்து ஏதோ, 'சரக், சரக், கிளிக், கிளிக்' என்ற சத்தம் வருவதைக் கேட்டுத் திடுக்கிட்டுக் கண் விழித்தாள் கமலா. கணவனை மெதுவாக அசக்கி எழுப்பி, "கீழே ஏதோ சத்தம் கேட்கிறது; திருடனாய் இருக்குமோ?" என்று பயத்துடன் கேட்டாள்.

"திருடன் தான். நான் கீழே இறங்கிப் போய் அவனை இரண்டு போடு போட்டு இழுத்து வருகிறேன்" என்று சொல்லியபடியே பரபர வென்று கிளம்பினான் கேசவன்.

"இந்தாருங்கள். தனியாய்ப் போகாதீர்கள். அண்ணா கோபாலனையும் அழைத்துப் போங்கள்" என்றாள் கமலா.

கேசவன் அதைக் காதில் வாங்கிக் கொள்ள வில்லை. மாடிப் படியில் தடதட வென்று இறங்கிக் கீழேயிருந்த ஸ்விட்சில் கை வைத்ததும் அறை முழுவதும் பிரகாசமாயிற்று.

மாடிப் படியை அடுத்திருந்த அறைக் கதவு திறந்திருப்பதையும் உள்ளே ஒரு ஆள் நிற்பதையும் கவனித்த கேசவன், "திருட்டுப் பயலே! இங்கேதான் இருக்கிறாயா?" என்று அவன் கைகளைச் சேர்த்துப் பிடித்துக் கொண்டு, "கமலா, கமலா! சீக்கிரம் வா. திருடனைப் பிடித்து விட்டேன்" என்று மகிழ்ச்சியுடன் கூவினான்.

அதுவரை சாதுபோல் நின்றிருந்த ஆள் அப்போது திணறிக்கொண்டு ஓட முயற்சித்தான். ஆனால் கல்லூரியில் கனம் தூக்கும் சாம்பியனாக இருந்த கேசவன் அவ்வளவு சுலபத்தில் பிடியைத் தளர விட்டு விடுவானா?

கமலா அறைக்குள் வந்தாள். தன் கணவன் பிடியில் அகப்பட்டுக்கொண்டு ஒருவன் திணறுவதைக் கண்டதும் அவளுக்கே ஆச்சரியமாயிருந்தது. அப்போதுதான் கேசவன், தான் பிடித்துக் கொண்டிருந்த ஆள்முகத்தைக் கவனித்தான். உடனே நாக்குழற "நீ! நீ!" என்று ஆரம்பித்தான்.

இச்சமயம் தன் பின்னால் ஏதோ அரவம் கேட்ட கமலா திரும்பிப் பார்த்தாள்.

"ஐயோ! இன்னொரு திருடன்!" என்று உரக்கக் கூவினாள்.

அந்த இன்னொரு திருடன் கேசவனை நெருங்கி, "விடாதே! அப்படியே அழுத்தமாய்ப் பிடித்துக் கொள். இந்தக் கயிற்றால் கட்டி விடுகிறேன்" என்றான்.

அவன் குரலைக் கேட்டதும்தான் அது யார் என்று தெரிந்தது கமலாவுக்கு.

"நீயா? நீ எதற்கு இப்படி வேஷம் போட்டுக்கொண் டிருக்கிறாய்?" என்று சற்றுப் பயந்தெளிந்த குரலில் கேட்டாள் கமலா.

"இன்று திருடன் வேஷம் போட்டுக் கொண்டு வந்து உங்களுக்குப் படம் காட்ட வேண்டுமென்றிருந்தேன். ஆனால் நான் கீழே வந்தபோது ஏற்கெனவே ஒருவன் அவ்வேலையில் ஈடுபட்டிருப்பதைப் பார்த்ததும் எனக்கே பயம் வந்துவிட்டது. மாப்பிள்ளை துணிச்சல் பேர்வழிதான்" என்றான் கோபாலன் ஆச்சரியத்துடன்.

கேசவன் ஒன்றும் சொல்லவில்லை. கீழே கலாட்டா செய்வது திருடன் வேஷத்திலிருக்கும் கோபாலன்தான் என்று எண்ணித் தான் வந்ததையும் உண்மைத் திருடன்தான் அவன் என்று தெரிந்திருந்தால் கமலா சொன்னபடி அறைக்கு உள்பக்கம் இரட்டைத் தாழ்ப்பாள் போட்டிருப்பானென்பதையும் அவன் ரகசியமாகவே வைத்துக்கொண்டு விட்டான்.



கேச விருத்திக்கும்

முக மலர்ச்சிக்கும்



ஸ்வஸ்திக்

வாஸனை

கேஸ்டர் ஆயில்



ஸ்வஸ்திக் ஆயில் மில்ஸ் லிட்., வடாலா பம்பாய்

SOM 182



# பாலையும் சோலையும்

வி.எஸ்.ஆர்

மாலை சுமார் ஆறு மணி யிருக்கும். ஆபீஸிலிருந்து வந்த ராமரத்தினம் உடைகளை மாற்றிக் கொண்டு காற்று வாங்க மொட்டை மாடிக்கு வந்தார். மேல் வேஷ்டியால் முகத்தில் அரும்பி யிருந்த வியர்வைத் துளிகளைத் துடைத்த வண்ணம் சாய்வு நாற்காலியில் சாய்ந்தார். 'கல்' 'கல்' என்ற காலணியின் சத்தம் மாடிப் படியில் ஏறி வருவது அவர் காதில் விழுந்தது. கண்ணை மூடிக் கொண்டு சாய்ந்து கொண்டிருந்த அவரது மூக்கைத் துளைத்தன காப்பியின் நறு மணமும் மல்லிகையின் வாசனையும். இந்தக் கதம்ப மணம் அருகில் நெருங்க நெருங்கப் பட்டுப் புடவையின் 'சர சர' சத்தமும் வளையல்களின் 'கலீர்' சத்தமும் நெருங்கி வந்தன. அந்த இன்ப போதையில் மெய் மறந்து சாய்ந்திருந்தார் ராமரத்தினம்.

"ரொம்பவும் களைப்பா யிருக்கிறதா? காப்பியைச் சாப்பிடுங்கள்!" என்ற மதுர மொழியைக் கேட்ட பிறகுகூட அவர் கண் விழிக்காமல் என்ன செய்ய முடியும்? ராமரத்தினம் கண் விழித்தார். மாலைச் சூரியனின் பொன்னொளிபட்டுத் தகதகவென்று மின்னிக் கொண்டு நின்றாள் வத்சலா. புன்னகை அவள் முகத்தை அழகு படுத்த, நீலப் புடவை அவள் தளிர் மேனியின் பொலிவை மிகைப் படுத்த, ரோஜா மலர் அவள் கூந்தலின் கருமையை அதிகமாக்கிக் காட்ட வத்சலா சௌந்தரிய தேவதையாகத் தோன்றினாள்.

"ஏன் உங்கள் முகம் வாட்டமாக இருக்கிறது? ஆபீஸில் ஏதாவது விசேஷமோ?" என்று கேட்டவாறே காப்பி டம்ளரை அவர் கையில் கொடுத்தாள் வத்சலா. அவளது தங்க மேனியின் இன்ப ஸ்பரிசம் அவரை என்னமோ செய்தது.

"அதெல்லாம் ஒன்றுமில்லை, வத்சலா! ஆபீஸில் கொஞ்சம் அதிக வேலை. மூளைக்குக் கொஞ்சம் உற்சாகம் தேவையாக இருக்கிறது. சீக்கிரம் சாப்பிட்டு விட்டு ஒரு நாடகம் பார்க்கப் போய் வருவோமா?" என்று கேட்டார் ராமரத்தினம் முகத்தில் புன் சிரிப்பை வருவித்துக் கொண்டு.

"ரொம்ப நன்றா யிருக்கிறது! இன்று நீங்கள் ஓய்ச்சலாக இருக்கிறீர்கள். முகம் நன்றாகவே இல்லை. பேசாமல் சாப்பிட்டு விட்டுப் படுத்துக் கொள்ளுங்கள். எப்பொழுதும் நமக்குப் பாட்டும் கூத்தும் உல்லாசமும்தானா? கொஞ்ச நேரம் நிம்மதி வேண்டாமா?" என்றாள் வத்சலா.

ஆனால் ராமரத்தினம் நாடகத்துக்குப் போக வேண்டுமென்று வற்புறுத்திச் சொல்லவே வத்சலா, "அப்படியானால் இதோ ஏற்பாடு செய்கிறேன். சீக்கிரம் சமையலைத் தயாரிக்கச் சொல்லி விடுகிறேன்" என்று குயிலினும் இனிய குரலில் மொழிந்து விட்டு மயிலினும் இனிய நடை நடந்து கீழே சென்றாள்.

வைத்த கண் வாங்காமல் அவளையே பார்த்துக் கொண்டிருந்த ராமரத்தினம் வேதனை நிரம்பிய ஆழ்ந்த பெருமூச்செறிந்தார். நிலை கொள்ளாமல் எழுந்து குறுக்கும் நெடுக்கும் சென்றார். மாடி வராந்தாவில் இருந்த நிலைக் கண்ணாடியில் அவர் உருவம் தெரிந்தது. அவர் தம் உருவத்தைப் பார்த்த வண்ணம் தடுமாறித் தத்தளித்து நின்றுவிட்டார். சற்று நரை விழத் தொடங்கி யிருந்த அவர் தலை மயிரும் முகத்தில் காலம் இடத் தொடங்கி யிருந்த மெல்லிய கோடுகளும் அவர் கண்களில் விழுந்தன.

அவர் முது பெரும் கிழவர் அல்ல. வயது நாற்பதுதான் ஆகியிருந்தது. ஆயினும் கல்யாணமாகி இந்த மூன்று மாதங்களாக அவர் உள்ளத்தில் ஒரு பெரும் ஐயப்பாடு தோன்றி அவரை வதைத்து வந்தது. சற்று முன் ஜகஜ்ஜோதியாக, யௌவனத்தின் சுடரொளியாகத் தம் முன் நின்ற வத்சலாவைப் பார்த்ததும் தம்மையும் அவளையும் பல தடவை ஒப்பிட்டுப் பார்த்துக் கொண்டார்.

வத்சலாவுக்கு இருபத்தைந்து வயது இருக்கும். இளமையின் எழில் தவழும் அவளுக்கும் முதுமையை விரைவாக நெருங்கிக் கொண்டிருந்த தமக்கும் கொஞ்சமும் பொருத்தம் இல்லை என்பதை அவரது மனச்சாட்சி அறிவித்தது. இருவருக்கும்தான் எவ்வளவு வித்தியாசம்? மனப்போக்கிலோ, லட்சியங்களிலோ, உணர்ச்சிகளிலோ இருவருக்கும் ஒற்றுமை இருக்க முடியுமா? தம் வாழ்க்கையிலேயே பெரிய தவறைச் செய்து விட்டதாக நினைத்தார். தாம் பணக்காரன் என்ற ஒரே மமதையினால் ஓர் இளம் பெண்ணுக்கு இழைத்துவிட்ட மகத்தான அநீதி வெள்ளிடை மலைபோல் அவர் முன் நின்றது. ஆனால் இந்த அநீதிக்கு அவரையே முற்றும் பொறுப்பாளியாகக் கூற முடியுமா?

* * *

ராமரத்தினம் ஒரு வியாபாரி. சாதாரண குமாஸ்தாவாகவே பல வருஷங்களுக்கு முன் தமது வாழ்க்கையை ஆரம்பித்துச் சாமர்த்தி

யத்தாலும் விடா முயற்சியாலும் முன்னுக்கு வந்தவர். சுமார் இருபது வருஷங்களுக்குமுன் காவேரியைக் கல்யாணம் செய்து கொண்டார். குழந்தை இல்லாக் குறையையும் மறந்து அவர்கள் சந்தோஷமாகவே இருந்தார்கள். மனமொப்பிய அந்தத் தம்பதிகளின் இன்ப வாழ்வைப் பற்றிப் பேசாதவர் அந்த ஊரில் யாரும் இல்லை. அடக்கம், பொறுமை உபகாரம் எல்லாவற்றுக்கும் காவேரியையே உதாரணமாகக் கூறுவார்கள். இரண்டு வருஷங்களுக்கு முன் அவளுக்கு 'டைபாய்ட்' ஜுரம் வந்தது. அதுவே எதிர்பாராத எமனாகவும் முடிந்தது.

மனைவியின் பிரிவாற்றாமையால் ராமரத்தினம் பித்துப் பிடித்தவர் போலானார். அவர் உடலும் உள்ளமும் உருகிப் போனதைக் கண்ட நண்பர்கள் அவர் மனத்தைத் திருப்ப நினைத்தனர். பிடிவாதமாக மறுகல்யாணப் பேச்சை வெறுத்து வந்தார் அவர். ஆனால் அவரது பிடிவாதத்தைக் கொஞ்சம் கொஞ்சமாகத் தகர்த்துக் கொண்டிருந்தாள் வத்சலா. முன்பெல்லாம் அவள் காவேரியைப் பார்க்க அடிக்கடி அவருடைய வீட்டுக்கு வருவது உண்டு. ஆனால் அவள் இப்பேர்ப்பட்ட பேரழகியாக விளங்குவாள் என்பதையும் தம் வாழ்வில் இவ்வாறு குறுக்கிடுவாள் என்பதையும் அவர் சற்றும் எதிர்பார்க்கவில்லை.

வத்சலாவின் தகப்பனார் உள்ளூர் தாலுக்கா ஆபீஸில் ஸ்டாம்புகள் விற்றுவந்த ஏழைக் குமாஸ்தா. மறு கல்யாணம் செய்து கொள்ளும்படி ராமரத்தினத்தை வற்புறுத்தியவர்கள், இதைத் தான் சுட்டிக் காட்டினார்கள். "மிஸ்டர் ராமரத்தினம்! இருபது வயதாகி இன்னும் கல்யாணமாகாமலிருக்கும் அந்தப் பெண்ணை நீங்களும் நிராகரித்து விட்டால் அப்புறம் அவள்கதி அதோ கதிதான்!" என்றார்கள்.

வத்சலாவின் அழகில் மயங்கி ராமரத்தினமும் சம்மதித்து



விட்டார். கல்யாணமும் நடந்து முடிந்தது. மணப் பந்தலில் அவர் வத்சலாவின் மலர்க் கரங்களைப் பற்றியபோது, 'இருவருக்கும் பொருத்தமா?' என்று அவர் மனத்தில் எழுந்த சந்தேகம் நிமிஷத்துக்கு நிமிஷம் அதிகமாகி வந்தது.

இருபது வயது வித்தியாசமுள்ள கணவனை வத்சலா ஏன் கல்யாணம் செய்து கொள்ள வேண்டும் என்ற பதிலையே அவரது உள்ளம் ஒவ்வொரு கணமும் தன்னைத்தானே கேட்டுக் கொண்டது. இதில் என்ன சந்தேகம் இருக்க முடியும்? பணத்துக்காகத்தான் அவள் தம்மைக் கல்யாணம் செய்து கொண்டிருக்க முடியும்! ஏழைக் குடும்பத்தில் பிறந்த பாவத்துக்காக வத்சலா தன்னைப் பலியிட்டுக் கொண்டு விட்டாள் என்றே ராமரத்தினம் முடிவு கட்டினார்.

வத்சலா புன்னகை தவழும் முகத்துடனும் அட்டற்ற ஆர்வத்துடனும் தம்மிடம் பழகுவதை ராமரத்தினம் கவனித்து வந்தார். ஆனால் கண்ணியமான குடும்பத்துப் பெண் வேறு எவ்விதம் நடந்து கொள்ள முடியும்? மனத்தில் எவ்வளவு குறை யிருந்தாலும் அதை வத்சலாவைப் போன்ற பெண் வெளியிட்டுக் கொள்ள முடியாதல்லவா? தாம் அந்தப் பெண்ணுக்குச் செய்துவிட்ட துரோகத்துக்குப் பரிகாரமாக என்ன செய்யலாம்? தம்மிடமுள்ள ஏராளமான செல்வத்தையும் அவள் காலடியில் சமர்ப்பித்துச் சகல சுக போகங்களையும் வழங்கினாலும் அது போதிய பரிகாரம் ஆகுமா?

இந்த எண்ணத்துடன் விதம் விதமாக ஆடை ஆபரணங்களை வாங்கி வத்சலாவுக்கு அணிவித்தார். முன்பெல்லாம் சினிமா, பாட்டுக் கச்சேரி என்[redacted] போய் அறியாத ராமரத்தினம் தினமும் ஒரு கேளிக்கைக்கு வத்சலாவை அழைத்துச் செல்வார். "எனக்காகப் பணத்தை ஏன் செலவு செய்கிறீர்கள்?" என்று வத்சலா சொல்லும் பொழுதெல்லாம், "வத்சலா! உனக்கு இல்லாத பணம் எனக்கு எதற்கு? என் கையில் உலகம் இருந்தால் அதை உனக்கே கொடுப்பேன்!" என்று உத்சாகத்துடன் கூறுவார்.

வத்சலாவோ தன் கணவன் ஆபீஸிலிருந்து வரும்போது புதுப் புது அலங்காரம் செய்து கொண்டு இன்முகத்துடன் வரவேற்பாள். எழில் சொட்டும் அவள் யௌவனம் மலர்ந்த புன்னகை, களிப்பூட்டுவதற்குப் பதிலாக ராமரத்தினத்துக்கு வேதனையையே அளித்தது. கணவரை உற்சாகப்படுத்த அவள் ஆடிப் பாடியதெல்லாம்கூட அவருக்கு மேலும் திகைப்பையே கொடுத்தன.

* * *

தூரத்தில் தோன்றிய நட்சத்திரங்களைப் பார்த்த வண்ணம் நின்று கொண்டிருந்த ராமரத்தினம் தம் அருகில் நிற்கும் வத்சலாவைப் பார்க்கவில்லை.



புருஷன் (பொருட் காட்சிச் சாலையில்):—இது ரொம்பப் பழைய காலத்துப் படமாம். அக்பர் காலத்திலே எழுதினதாம். இருபதாயிரம் ரூபாய் விலை போட்டிருக்கிறது. பார்த்தாயா?

மனைவி:—பார்த்தேன். இந்தப் பழைய படத்துக்கே இவ்வளவு விலை என்றால் இது புதிதாக இருந்த போது என்ன விலை இருந்திருக்கும்!

"ஏன் இப்படி நிற்கிறீர்கள்? சாப்பிட வாருங்கள்! எட்டு மணிக்கு நாடகக் கொட்டகையில் இருக்க வேண்டாமா?" என்ற மனைவியின் குரலைக் கேட்டுத் திடுக்கிட்டுத் திரும்பிப் பார்த்தார் ராமரத்தினம்.

"ஓ! போகலாம்! இதோ வந்து விட்டேன்!" என்று உற்சாகம் உள்ளவர்போல் நடித்தார் ராமரத்தினம்.

"கட்டாயம் நாம் நாடகத்துக்குப் போக வேண்டுமா? நாம் என்ன குழந்தைகளா, ஓயாமல் நாடகம் என்றும் சினிமா என்றும் போய்க் கொண்டிருப்பதற்கு?" என்று கேட்டாள் வத்சலா சற்றுத் தயக்கத்துடன்.

"அதென்ன, அப்படிச் சொல்கிறாய், வத்சலா? இந்த வயதில் நீ சந்தோஷமாக இருக்க வேண்டியவள்தானே? என்னோடு வர இஷ்டமில்லாவிட்டால் நான் உன்னைக் கட்டாயப் படுத்தவில்லை!"

சாட்டையினால் அடிக்கப் பட்டவள்போல், இவ் வார்த்தைகளைக் கேட்ட வத்சலா துடித்துப் போய் விட்டாள். "ஐயோ! நான் வர இஷ்டப்படாமல் இல்லை. இதோ நாடகத்துக்கு வருகிறேன்" என்று பதறிய வண்ணம் கூறினாள் அவள். அப்பொழுது அவள் உடம்பு லேசாக நடுங்கியது.

"இன்று நாடகத்துக்கு மட்டும் இல்லை. நாளை புஷ்பக் கண் காட்சி சாலைக்கு போகப் போகிறாய். நாளை மறு நாள் வனமாலாவின் நாட்டியக் கச்சேரி, அதற்கு மறுநாள் 'பிக்னிக்' எல்லாவற்றுக்கும் வரப் போகிறாய். செல்வம் கொடுக்கும் சகல சுகங்களும் உனக்குத்தான்!" என்று பரபரப்புடன் உற்சாகம் தொனிக்கக் கூறினார் ராமரத்தினம்.

* * *

இரண்டு வருஷங்கள் சென்றன. ராமரத்தினத்தின் வாழ்வில் எதிர்பாராத சம்பவம் நடந்தது. ராமரத்தினம் இந்தச் சம்பவத்தை எதிர்பார்க்கவில்லையே தவிர, அவரது நண்பர்கள் இவ்விதம் நேருமென்பதை ஓரளவு எதிர்பார்த்துக் கொண்டுதானிருந்தார்கள். மாதாமாதம் ஆயிரக்கணக்கான ரூபாய்களை வாரிச் செலவழித்துக் கொண்டிருந்தால் ஒரு சமயத்தில் பண நெருக்கடி ஏற்படும் என்பது அவர்களுக்குத் தெரிந்துதானிருந்தது. அவரது வியாபாரத்திலும் மந்தம் ஏற்படவே, அவரது கம்பெனி ஒருநாள் சிதறுண்டது.

ராமரத்தினம் பேரிடி விழுந்தவர் போலானார். இந்த உலகத்தில் அவர் பெருமைப் பட்டுக் கொண்டிருந்த ஒரே விஷயமான



"இந்தப் பையனுக்கு டிக்கட் இருக்கிறதா, இல்லையா? இல்லையென்றால் நீங்கள் வாங்கியாகணும்!"

"அதெல்லாம் நான் வாங்க முடியாது!"

"வாங்க முடியாதா? இவ்வளவு பெரிய பையனை டிக்கட் இல்லாமல் அழைத்துக் கொண்டு போக முடியுமா? பையனுக்கு என்ன வயசாகிறது, சொல்லுங்கள்!"

எனக்கு எப்படித் தெரியும்? நான் இதற்குமுன் இவனைப் பார்த்ததே கிடையாதே!"

செல்வமும் அவரை விட்டுப் போய்விட்டது. அவரது இளம் மனைவியைக் குதூகலப்படுத்த ஒரே ஒரு சாதனமாக இருந்த அந்தச் செல்வம் அவர் கையை விட்டு நழுவியதும் அவர் தாங்க முடியாத துயரத்தை அடைந்தார். தாம் ஏழையாகி விட்ட செய்தியை அறிந்தால் வத்சலாவுக்கு எப்படியிருக்கும்? எதிர்காலத்தைப் பற்றி எவ்வளவோ இன்பக் கோட்டைகள் கட்டி வந்த இளம் இருதயம் எத்தகைய அதிர்ச்சியை அடையும்? தம்மை நம்பிக் கல்யாணம் செய்து கொண்ட பெண்ணுக்குத் தாம் கொடுக்கக் கூடியது வறுமையும் ஏமாற்றமும்தானா? வியாபாரம் முறிந்து போன செய்தியை மனைவியிடம் சொல்லவும் அவர் கூசினார்; நடுங்கினார்.

அன்று இரவு சாப்பிட்டதாகப் பாவனை செய்து விட்டு மேல்மாடிக்கு வந்தார் ராமரத்தினம். சற்று நேரத்துக்கெல்லாம் வெற்றிலைத் தட்டுடன் அருகில் வந்த வத்சலாவைக் கண்டதும் அவர் மனம் குழம்பியது. நிலவின் குளுமையும் மலரின் மணமும் வத்சலாவின் புன்னகையும் அவரைச்சித்திரவதைசெய்தன.

"வெற்றிலை போட்டுக் கொள்ளுங்கள்!" என்று சொல்லிப் பக்கத்தில் உட்கார்ந்து கொண்டு வெற்றிலை மடித்துக் கொடுத்த வத்சலாவைப் பார்க்கவும் தைரியமின்றி முகத்தை வேறு பக்கம் திருப்பிக் கொண்டார் ராமரத்தினம்.

"ஒரு விஷயம் கேட்கிறேன், கோபித்துக் கொள்ள மாட்டீர்களே?" என்று கேட்டவாறே வத்சலா வெற்றிலையைக்கொடுத்தாள்.

ஆகாயமே இடிந்து தம் தலையில் விழுந்து விட்டதைப் போலிருந்தது ராமரத்தினத்துக்கு. அவர் மனைவியிடம் சொல்லக் கூடாது என்று நினைத்த செய்தி அவளுக்குத் தெரிந்து விட்டதா? அவளுக்கு என்ன பதில்சொல்வது?

வத்சலா கொடுத்த வெற்றிலை அவர் கையிலிருந்து நழுவ, நீதிபதியின் முன் நிற்கும் குற்றவாளியைப் போல் செயலிழந்து உட்கார்ந்திருந்தார் அவர்.

அவரது நிலையை அறிந்த வத்சலா, "நீங்கள் ஏன் வருத்தப்படுகிறீர்கள் என்பது எனக்குத் தெரியும். இதற்காக நீங்கள் மனம் கலங்கலாமா? வியாபாரத்தில் இப்படியெல்லாம் லாப நஷ்டங்கள் ஏற்படுவது சகஜம்தானே? தன்னம்பிக்கையும் விடா முயற்சியும் இருந்தால் நாளைக்கே இன்னொரு வியாபாரத்தை ஆரம்பித்து லாபம் சம்பாதிக்க முடியாதா? வாழ்க்கையை வெற்றியாக்கிக் கொள்ள முடியாதா?" என்றாள் உணர்ச்சி பொங்க.

இருதயத்துக்கு இதத்தை அளித்த அருமருந்து போன்ற வத்சலாவின் மொழிகளைக் கேட்டுத் திடுக்கிட்டார் ராமரத்தினம். எந்தச் செய்தியைக் கேட்டு வத்சலா இடிந்து போய் விடுவாள் என்று அவர் பயந்தாரோ, அதை அவள் எவ்வளவு சாவதானமாக ஏற்றுக் கொண்டிருக்கிறாள்? ஏற்றுக் கொண்டது



"என்னடா அம்பி, நீயும் உன் அண்ணனும் சண்டை போட்டுக் கொள்ளாமல் சந்தோஷமாக இருக்க முடியாதோ?"

"சண்டை போடாமல் இருக்க முடியும், மாமா! ஆனால் சந்தோஷமாய்த்தான் இராது!"

மட்டுமின்றி எவ்வளவு உற்சாகமான வார்த்தைகளைக் கூறுகிறாள்? ஆனால் பாவம், இன்னொரு வியாபாரம் ஆரம்பிக்க முடியாத நிலைமை அவருக்கு ஏற்பட்டிருப்பது அவளுக்கு எப்படித் தெரியும்?

"வத்சலா! நிஜத்தைச் சொல்லிவிடுகிறேன். என் நிலைமை எவ்வளவு மோசமானது என்பது உனக்குத் தெரியாது. புது வியாபாரம் ஆரம்பிக்கக் கையில் பணமில்லை" என்று அவர் துயரத்துடன் கூறுமுன் வத்சலா குறுக்கிட்டு, "என்னிடம் முப்பதினாயிரம் ரூபாய் இருக்கிறது. நீங்கள் எனக்குச் செய்து போட்ட நகைகள் பத்தாயிரம் பெறும். இதைத் தவிர இரண்டு வருஷ காலமாக நீங்கள் வீட்டுச் செலவுக்காகக் கொடுத்த பணத்தில் மீச்சம் பிடித்துச் சுமார் இருபதினாயிரம் வைத்திருக்கிறேன். இந்தப் பணத்தை வைத்துக் கொண்டு தாங்கள் சந்தோஷமாக புது வியாபாரத்தை ஆரம்பித்து விடுங்கள்!" என்று கனிவும் அன்பும் பொங்கக் கூறினாள்.

தம் காதுகளை நம்ப முடியாமல் திக்பிரமை பிடித்து உட்கார்ந்து விட்டார் ராமரத்தினம். பின்னர் சமாளித்துக்கொண்டு, "வத்சலா! என்ன சொல்கிறது என்றே தெரியவில்லை. நான் செய்திருக்கும் தவறு போதாதென்று உன் நகைகளையும் பறித்துக் கொள்ள வேண்டுமா? எதற்காகத்தான் இந்த நஷ்டம் ஏற்பட்டதோ?" என்றார் துயரத்துடன்.

"உங்களுக்கு ஏற்பட்ட நஷ்டத்தை எவ்வளவு சந்தோஷமாக நான் வரவேற்கிறேன், தெரியுமா?" என்றாள் வத்சலா.

"வரவேற்கிறாயா? நீ என்ன சொல்கிறாய்? புரியவே இல்லையே, வத்சலா!" என்று திடுக்கிட்டுக் கேட்டார் ராமரத்தினம்.

"ஆமாம். நான் கேவலம் பணத்துக்காக உங்களைக் கல்யாணம் செய்து கொண்டதாக நீங்கள் எண்ணியிருப்பது எனக்குத் தெரியாமல் இல்லை. என்னைச் சந்தோஷப்படுத்துவதற்காகப் பணத்தைக் கண் காது தெரியாமல் செலவழித்தீர்கள். இவ்வித நெருக்கடி ஏற்படும் என்று தெரிந்துதான் பணச் செலவு செய்ய வேண்டாமென்று தங்களைத் தடுத்தேன். ஆனால் நீங்கள் கேட்கவில்லை. ஆகவே, முன் ஜாக்கிரதையாக பணத்தைச் சேர்க்கத் தொடங்கினேன்.

"நான் பணத்தைப் பெரிதாக கருதவில்லை என்பதையும் தங்களுக்காக எல்லாவற்றையும் தியாகம் செய்யத் தயாராக இருக்கிறேன் என்பதையும் காண்பிக்க இந்த நஷ்டம் ஒரு சந்தர்ப்பத்தைக் கொடுத்ததல்லவா?" என்று சொன்னாள் மெதுவான குரலில்.

ராமரத்தினம் சட்டென்று எழுந்து வத்சலாவின் கரங்களைப் பற்றினார். "நான் உன்னைத் தவறாக மதிப்பிட்டேன். உன்னைக் கலியாணம் செய்து கொண்டது தவறோ என்று கூட நினைத்தேன். இருபது வயது வித்தியாசமுள்ள நான்......"

"இது ஒரு வித்தியாசமா? வயது வித்தியாசத்தைவிட மன வித்தியாசம் அல்லவா மிகவும் கொடியது! எனக்கு மனத்தில் எவ்வித மான குறையும் இல்லை. உங்களைக் கணவராக அடையக் கொடுத்து வைத்தது என் பெரும் பாக்கியம் என்றே எண்ணுகிறேன்."

மேலே பேச முடியாமல் திணறிப் போய் அவரது காலடியில் பூங்கொடி போல் விழுந்தாள் வத்சலா.

அதுவரை பாலை வனத்தில் பிரயாணம் செய்து கொண்டிருந்த அவர் அகக் கண்களிலும், வறட்சி தட்டிய புறக் கண்களிலும், சோபை இழந்த வதனத்திலும் நீர்ச் சோலைகளும் நிழல் மரங்களும் குளுமையாகக் காட்சி அளித்துக் கொண்டிருந்தன.

●●● இந்தக் கதையின் ஆசிரியரான ஸ்ரீ வி. எஸ். ராமகிருஷ்ணன் சில தினங்களுக்குமுன் அகால மரணம் அடைந்த திடுக்கிடும் செய்தியைக் கேட்டுப் பெருந் துயரம் அடைந்தோம். சிறந்த தமிழ் எழுத்தாளர்களில் ஒருவராகத் திகழ்ந்த ஸ்ரீ ராமகிருஷ்ணன், 'வஸந்தன்' என்ற புனைப் பெயரில் ஏராளமான சிறு கதைகளும் நீண்ட கதைகளும் எழுதி ஆயிரக்கணக்கான வாசகர்களின் உள்ளங்களைக் கவர்ந்தவர். அவருடைய பிரிவினால் தவிக்கும் அவரது அன்னைக்கும் இளம் மனைவிக்கும் ஏக புதல்வனுக்கும் நம் மனமார்ந்த அநுதாபத்தைத் தெரிவித்துக் கொள்கிறோம். ●●●

# பாவம், ராமமூர்த்தி!

கே. எஸ். எஸ். ராகவன்

காலையில் எழுந்திருப்பதும், கந்தையானாலும் கசக்கிக் கட்டுதலும் சாலச்சிறந்த பழக்கங்கள் என்பதை நான் ஒப்புக் கொள்கிறேன். ஆனால் அதற்காக என் அண்டைவீட்டு நண்பர் ராமமூர்த்தி காலை நான்கு மணிக்கே எழுந்திருந்து தன் பலம் கொண்டவரையில் ஓங்கித் துணியைத் துவைக்க வேண்டுமா! இந்த விஷயத்தில் அண்டை அயலிலிருக்கும் நாங்கள் தனித் தனியாகவும் கோஷ்டியாகவும் அவரிடம் முறையிட்டுக் கொண்டிருக்கிறோம்; பயனில்லை. சாதாரண நாட்களாக இருந்தாலும் வேறு இடத்துக்குக் குடி போயிருக்கலாம். இப்போது இருக்கும் நிலையில் அதைப் பற்றிக் கனவிலும் நினைக்க முடியாது. நல்ல வேளையாக நாளடைவில் இது எனக்குப் பழக்கமாகப் போய் விட்டது.

பல நாட்களுக்குப் பிறகு ஒரு நாள் என் நண்பன் சந்திரனோடு இரண்டாவது ஆட்டம் சினிமாவுக்குப் போவதற்கு நாழியாகிவிட்டது என்று என் இடத்தில் படுத்துக் கொண்டான்.

நான்கு மணி யிருக்கும். யாரோ தடதடவென்று தலையில் கல்லைக் கொட்டுவது போலிருந்தது. எழுந்து பார்த்தால் சந்திரன் என்னைத் தட்டி எழுப்பிக் கொண்டிருந்தான்.

"பாலு! கும்பகர்ணன் உன்னிடம் பிச்சை வாங்க வேண்டும். அவனையாவது ராம-ராவண யுத்தம் எழுப்பி விட்டது. ஆனால் உன்னைப் பக்கத்து வீட்டில் விழும் இடி கூட எழுப்ப முடியாது போலிருக்கிறதே!" என்றான் சந்திரன், என் காதில் சங்கை ஊதுவது போல்.

"இடியா, பக்கத்து வீட்டிலா!" என்று நான் அலறிப் புடைத்துக் கொண்டு எழுந்தேன்.

அப்புறம்தான் தெரிந்தது. அது இந்திரனின் வஜ்ராயுதத்தின் கர்ஜனை அல்ல. பக்கத்து வீட்டு ராமமூர்த்தியின் பாகுபலம் என்பது.

"அட கஷ்டமே, இதற்காகவா என்னை எழுப்பினாய்! இதுதான் நித்ய நாடகம் ஆயிற்றே!"
இதை நிறுத்துவதற்கு வழி கிடையாதா!"

"அவரிடம் எத்தனையோ தடவை சொல்லிப் பார்த்தாய் விட்டது. "துணி தோய்ப்பதற்கு உரிமை இல்லை யென்றால், சுதந்திரம் எதற்கு. அரசியல் திட்டம் எதற்கு!" என்று விதண்டாவாதம் செய்கிறார். அழுத்திச் சொன்னால் அரசியல் சட்டத்தை எடுத்துக் காட்டி, 'விடுதலை இந்தியாவில் யார் வேணுமானாலும், எந்த இடத்திலும், எந்த தொழிலும் செய்யலாம். இந்த விஷயத்தில் ஸுப்ரீம் கோர்ட் வரையில் போகத்தயார்' என்று வீராப்புப் பேசிக்கொண்டு வம்புக்கு வருகிறார்."

"சுத்த முட்டாள்!"

"அதைத்தான் நானும் சொல்லுகிறேன். இந்த பிடிவாதம் மாதிரி முட்டாள்தனம் உண்டா!"

"அவனை நான் சொல்லவில்லை. உன்னைத்தான் சொல்லுகிறேன். அவன் கொட்டத்தை அடக்கத் தெரியவில்லையே! இதிலெல்லாம் பழைய நாள் காங்கிரஸ் வாதிகள் மாதிரி மறுப் போடுவது தற்காப்பு செய்து கொள்ளுவது இவைகள் பலிக்காது. ஐந்தாம் படை மூலம்தான் வேலை செய்ய வேண்டும். அறுபது வயதுக் கிழவனால் ஒரு வருஷத்தில் செய்ய முடியாத காரியத்தை, ஒரு பதினாறு வயதுப் பெண் ஒரே நாளில், ஒரே நிமிஷத்தில் செய்து முடித்து விடலாம்......"

"பெண்" என்ற பேச்சைச் சந்திரன் எடுத்தவுடன் எனக்குத் 'திக்'கென்றது. சாதாரணமாக அவன் அந்தப் பேச்சை எடுத்தால் என் பர்ஸில் தான் போய் முடியும். ஆகையால் பரபரப்புடன், "சந்திரா! உனக்குப் புண்ணியமாகப் போகும். ராமமூர்த்தி எவ்வளவோ நாளாகத் துணி துவைத்துக் கொண்டிருக்கிறார். சத்தம் பழகி விட்டது. அதை நிறுத்தினால்தான் இனிமேல் எனக்குத் தூக்கம் வராது. அந்த மனுஷ்யன் ஏதோ வயிற்றை ஒடுக்கி, வாயை ஒடுக்கி ஏதோ நாலு காசு வைத்திருக்கிறார். அவர் பணமும் போய், சுதந்திரமும் போய்த் திண்டாட வேண்டாம். ஏதோ கொஞ்சம் முடுக்காகப் பேசுகிறாரே தவிர, மொத்தத்தில் மனிதர் நல்லவர்தான்......" என்று கெஞ்சும் குரலில் சொன்னேன்.

அதெல்லாம் சந்திரன் காதில் ஏறிற்றோ என்னவோ, ராமமூர்த்தியை மனதார வைது கொண்டே தூங்கிப் போய்விட்டான்.

நான்கு நாள் கழித்து நான் ராமமூர்த்தியை வழியில் பார்த்தபோது அவரிடம் ஒரு மாறுதல் ஏற்பட்டிருந்ததைக் கவனித்தேன். இது வரையில் உடை விஷயத்தில் கட்டுப் பெட்டியாக இருந்த அவர், சில நுணுக்கமான (ஆனால் பணத்தை இழுக்கக்கூடிய) மாறுதல்களைச் செய்திருந்தார். குடுமியை மறைத்துக் கொள்வதற்கு முன்பெல்லாம் ஒரு தலைப்பாகை—வெகு—நாள்முன் வண்ணானிடம் சென்று வந்தது வைத்துக் கொண்டிருந்தார். இப்போது அந்த இடத்தில் ஒரு விலையுயர்ந்த குல்லாய் உட்கார்ந்திருந்தது. செருப்புக்குப் பதிலாக பளபளவென்று மின்னும் பூட்ஸ். என் மனத்



"ஏன் அப்பா, வண்டிக்காரா, குதிரை வேகமாய்ப் போகுமா? குனிந்த தலையை நிமிர்த்த மாட்டேன் என்கிறதே!"

"அது எப்படிங்க தலையை நிமிர்த்தும்? நீங்க வண்டி வாடகை பேசியதைக் கேட்டுத்தான் அப்படி வெட்கப் படுதுங்க! இன்னும் நாலணா போட்டுக் கொடுக்கிறேன்னு சொல்லுங்க, எப்படிப் போகிறது பாருங்க!"



தில் உதித்த சந்தேகத்தை அவர் முதல் வார்த்தையே உறுதி செய்து விட்டது.

"மிஸ்டர் பாலு! உங்கள் நண்பர் சந்திரன் ரொம்ப நல்ல பையன்; பெரிய இடத்துப் பழக்கம் நிரம்ப உண்டு போலிருக்கிறது..." என்று பனிச் சென்று வார்த்தையை ஆரம்பித்தார்.

"பெரிய இடத்துப் பழக்கம் என்ன. அவனே பெரிய இடத்துப் பிள்ளைதான். ஸ்டாக் எக்ஸ்சேன்ஜ் சூரியநாராயணனைத் தெரியுமோ இல்லையோ, அவர் பிள்ளைதான் அவன்......."

"ஹா! அப்படியா!" என்று அவர் வாயைப் பிளந்தபோது, சூரியநாராயணரும் அவருடைய ஏராளமான சொத்தும் அவருக்குத் தெரியாத விஷயமல்ல என்பது புலப்பட்டது.

"அதுதானே பார்த்தேன்! இரண்டு நாள் முன் அவனைச் சந்தித்தேன். 'விடமாட்டேன்' என்று சொல்லி ஹோட்டலுக்கு இழுத்துக் கொண்டு போய் விட்டான். அப்படி, அவன் செய்த உபசாரமும்......'ஆமாம், வித்தியாசமாக நினைத்துக் கொள்ளக் கூடாது. மிஸ்டர் சந்திரனுக்குக் கல்யாணம் ஆகிவிட்டதோ!'"

"இல்லை. ஏன் இந்தக் கேள்வி! யாராவது பெண் இருக்கிறதோ!" என்று நான் மிகுந்த ஆவலோடு கேட்டேன்.

"பெண்ணா! சரியாய்ப் போச்சு! அவர்கள் எங்கே நாமெல்லாம் எங்கே! அன்று ஒரு பெண் அவன் கூட வந்தாள். ஒருக்கால் அவன் மனைவியோ அல்லது......"

"சேச்சே! சந்திரன் ரொம்ப நல்ல பிள்ளை. யாராவது காலேஜில் படித்த சிநேகிதியாக இருக்கலாம். கல்யாணம் செய்து கொள்ளும் உத்தேசமே சந்திரனுக்குக் கிடையாது" என்று ஒரு போடு போட்டு வைத்தேன்.

ராமமூர்த்தியின் முகம் மலர்ந்தது. அதோடு என்னை உதறி விட்டுப் போக அவர் துடித்ததையும் கவனித்தேன்.

"எங்கே வீட்டிற்குத்தானே, நானும் வருகிறேன். வாங்கள் போகலாம்" என்று நான் சொன்னவுடன் அவர் ஏதோ தணல்மேல் கால் வைத்தவர் போல் தவித்தார். "இல்லை எனக்குக் கொஞ்சம் காரியமிருக்கிறது. நான் அப்புறம் வருகிறேன்" என்று அசடு வழியக் கூறிவிட்டு வேகமாக நடந்தார். நானும் அவருக்கு எதிர்ப் பக்கமாகப் போவதுபோல் போக்குக் காண்பித்து விட்டு, பிறகு திரும்பினேன். எட்டி யிருந்துதான் பார்க்க முடிந்தது. தெரிந்த வரையில் தெருக்கோடியில் சந்திரனும் ஒரு பெண்ணும் போலிருந்தது. ராமமூர்த்தி ஓட்டமாக ஓடி அவர்களுடன் சேர்ந்து கொண்டார். பிறகு அங்கிருந்த ஒரு டாக்ஸியில் அவசரமாக ஏறிக் கொண்டு போனார்கள்.

ராத்திரி பத்து மணி வரையில் காத்திருந்து பார்த்தேன். ராமமூர்த்தியைக் காணோம். மறுநாள் விடியற்காலையில் நான்கு மணிக்கு எழுந்து பார்த்தேன். துணி துவைக்கும் சத்தம் கேட்டது. ஆனால் வழக்கமான வலிமை இல்லை. சந்திரன் வெற்றியடைந்து , விடுவான் போலிருக்கிறதே என்று நினைத்துக் கொண்டு தூங்கினேன்.

* * *

மறுபடியும் நான் ராமமூர்த்தியைச் சந்தித்த போது பிரமித்துப் போய் விட்டேன் ஒரு நவநாகரிகமான மனிதனைப் போல் தோன்றினார்.

எனக்குச் சந்திரனிடம் கோபமாக வந்தது. காரியம் மிஞ்சுவதற்குள் ஆசாமியை மீட்க வேண்டும் என்று எண்ணினேன்.

"மிஸ்டர்! ராமமூர்த்தி! ஒரு விஷயம். பண விஷயத்தில் சந்திரனிடம் கொஞ்சம் ஜாக்கிரதையாக இருப்பது நல்லது. அவனுக்கு ஞாபக மறதி ஜாஸ்தி. வேறு என்ன, ஏதோ ஐம்பது, அறுபது வாங்கினால் திருப்பிக் கொடுக்க மறந்து விடுவான். அதோடு..."

ஆனால் நான் மேலே பேசுவதற்குள், "என்ன சார், நீங்கள் கூட இப்படிச் சொல்கிறீர்களே! உங்கள் கையெழுத்துப் போட்ட "செக்"கைத் தானே என்னிடம் கொடுத்துப் பணம் வாங்கிப் போனான்!" என்றார் ராமமூர்த்தி.

எனக்குப் 'பகீ'ரென்றது. சந்திரனிடம் பாங்கில் போடும்படி நூறு ரூபாய்க்கு "செக்" அனுப்பியது அப்போதுதான் ஞாபகம் வந்தது!

ராமமூர்த்தி மேலும் சொல்லிக் கொண்டே போனார். "பணம் இன்றைக்கு வரும், நாளைக்குப் போகும்! நமக்கு மனுஷான்தான் வேணும் ஸார்! அதிருக்கட்டும் உங்களை ஒன்று கேட்க வேண்டும் என்று நினைத்தேன். 'மிஸ்டர் கல்யாணம்' என்று சொல்லிக் கொண்டிருந்தீர்களே, அதில் ஆபத்து ஒன்றும் இல்லையே!"

சரிதான்! வெள்ளம் உடைப்பு எடுத்துக் கொண்டு போன பிறகு மண்ணைத் தூவி என்ன பிரயோஜனம்!

ராமமூர்த்திக்கு பதில் சொல்ல நான் ஆரம்பிப்பதற்குள் சந்திரனும் அவனோடு கூட இன்னும் ஒருவரும் வந்தார்கள்.

அவனிடம் நான் அந்த நூறு ரூபாய் 'செக்' கைப்பற்றி கொஞ்சம் காரமாகவே பேச வேண்டும் என்று நினைத்தேன். ஆனால் கூடி இருந்தவர்களை உத்தேசித்துக் கேட்கவில்லை.

அதற்குள் சந்திரனோடு வந்த நாரீமணி, "ராமு, இன்றைக்கு எந்த சினிமாவுக்குப் போகலாம்!" என்று கொஞ்சினாள்.

நான் சந்திரனுடைய முகத்தைப் பார்த்தேன். அவன் சிரிப்பை அடக்கிக் கொண்டு, "ரமா!

நீங்கள் இரண்டு பேரும் போய்விட்டு வாருங்கள். எனக்குப் பாலுவிடம் கொஞ்சம் காரியம் இருக்கிறது" என்று சொன்னதைக் கேட்டதும் ராமமூர்த்தியினுடைய முகம் மலர்ந்தது.

அவர்கள் போனவுடன் நான் சந்திரனை வாயார வைய வேண்டுமென்று, "என்ன இருந்தாலும்" என்று ஆரம்பித்தேன்.

ஆனால் அவன் என்னை மறித்து, "என்ன இன்று ராத்திரி நிம்மதியாகத் தூங்க முடியுமா!" அல்லது நான்கு மணிக்கு இடி விழப் போகிறதா!" என்று சிரித்துக் கொண்டே கேட்டான்.

"அப்பா இருபது வருஷப் பழக்கம் இரண்டு வாரத்தில் போய் விடுமா! இன்னமும் மனிதன் நான்கு மணிக்கு எழுந்திருக்கிறார். முன்பெல்லாம் அரை மணி துவைப்பார். இப்போது ஐந்து நிமிஷத்திற்கு வந்திருக்கிறது."



சந்திரன் முகத்தில் கொஞ்சம் ஏமாற்றம் படர்ந்தது. "ரமா அப்போது நான் நினைத்தபடி சுறுசுறுப்பாக இல்லை" என்று சம்பந்தமில்லாமல் சொன்னான்.

"சந்திரா! நான் உன்னை அப்போதே கேட்க வேண்டுமென்று நினைத்தேன். இந்த ரமா யார்! புதிதாய் இருக்கிறதே, இவளை எங்கே எப்படிப் பிடித்தாய்!" என்றேன்.

"பாலு, கொஞ்சம் நாக்கை அடக்கிப் பேசு. மிஸ் ரமா கூடிய சீக்கிரத்தில் மிஸஸ் சந்திரனாகப் போகிறாள். அடடா! நீ என்னவோ சும்மா ஊர்ப் பெண்களுக்கு ஹாஸ்ய உணர்ச்சியே கிடையாது என்று சொல்வாயே! நான் ராமமூர்த்தியைப் பற்றிச் சொன்னதும் அவள் தான் இந்த வழியைக் காட்டினாள். மனிதன் தேன் குடித்த நரியைப் போலல்லவா ஆகி விட்டான்! ரமா தன்னுடைய பாகத்தை எப்படி நடிக்கிறாள் பார்த்தாயா! முகத்தில் சிரிப்பின் அடையாளத்தையே காணோமே! வீட்டிற்கு வந்த பிறகு அவள் உங்கள் ராமமூர்த்தியின் அசட்டுக் காரியங்களை அபிநயத்தோடு எடுத்துச் சொல்லும்போது எங்கள் இரண்டு பேருக்கும் சிரித்து வயிறு வெடித்துப் போய் விடும்! ராமமூர்த்தி 'ரிஜிஸ்டர் கல்யாண'த்திற்குக் கூடப் பதிவு செய்து விட்டு வந்திருக்கிறானாமே!" என்று சொல்லி விட்டு சந்திரன் கவலையின்றிச் சிரிக்க ஆரம்பித்து விட்டான். அவன் சிரிப்பு என்னைத் திகைக்க வைத்து விட்டது.

"அப்படி யென்றால் இவ்வளவும் ஏமாற்றம் என்று சொல்லு, பாவம்!" என்றேன்.

"பாவமா! இப்போது போகச் சொல்லேன் ஸுப்ரீம் கோர்ட்டிற்கு! நாலு மணிக்கு எழுந்து தலையில் அறைவதுபோல் துணி தோய்ப்பதற்கு உரிமை இருக்கிறதாமே உரிமை! பார்க்கலாம் பதினைந்தாம் தேதி, அவனை அந்த உரிமை என்ன செய்யப் போகிறதென்று! மனிதன் தயாராக ரிஜிஸ்ட்ரார் ஆபீஸிற்குப் போய்க் காத்துக் கொண்டிருக்கப் போகிறான். காத்துக் கொண்டே யிருக்க வேண்டியதுதான்! வேணுமானால் குளத்தங்கரைப் பிள்ளையாரைத் துணைக்கு அனுப்பலாம்."

"அப்படியானால் ரமா!"

"நானும் ரமாவும் பதினாலாம் தேதியே கிளம்பிப் பூனாவிற்குப் போய்விடப் போகிறோம்."

எனக்கு ராமமூர்த்தியிடம் பச்சாத்தாபம்தான் இருந்தது. அவரிடம் சொல்லி விடலாமா என்று கூட நினைத்தேன். ஆனால் சந்திரன் வாய்க்குப் பயந்து கொண்டு சும்மா இருந்து விட்டேன்.

பதினைந்தாம் தேதி வந்தது. என் மனம் 'பட் பட்' என்று அடித்துக் கொண்டது. ஆபீஸில் வேலையே ஓடவில்லை. இத்தனை நேரம் ராமமூர்த்தி ரிஜிஸ்ட்ரார் ஆபீஸிற்குப் போயிருப்பார்; அரை மணி நேரமாயிற்றே, இன்னும் ரமாவைக் காணோமே என்று கைக்கடியாரத்தைப் பார்ப்பார்...... இன்னும் அரை மணி, ஒரு மணி...... பாவம்! என்ன இருந்தாலும் சந்திரனின் விளையாட்டு புத்தி அளவுக்கு மீறி விட்டது!

அன்று வீடு திரும்பும்போது மணி எட்டாகி விட்டது. பக்கத்து வீட்டில் என்ன நடக்கிறது என்று உன்னிப்பாகக் கவனித்தேன்.

யாரோ என் வாசல் கதவைத் தட்டினார்கள். பாவம், ராமமூர்த்தியாகத்தான் இருக்கும். அவருக்கு என்ன ஆறுதல் சொல்வது!...... வந்தது சந்திரன்! அவன் முகம் வெளுத்திருந்தது.

"என்ன சந்திரா!" என்று என்னையும் அறியாமல் கத்தியே விட்டேன்.

பக்கத்து வீட்டுக் கதவு திறந்தது. "மிஸ்டர் பாலு! நீங்கள் என் நெடுநாளைய சிநேகிதர். சொல்ல எனக்கு உரிமை யுண்டு. தயவுசெய்து ரொம்பச் சத்தம்போடாதீர்கள் தாங்கள் போட்ட சத்தத்தைக் கேட்டதும் என் மனைவிக்குத் தூக்கி வாரிப் போட்டது. அதோடு, மிஸ்டர் பாலு! நீங்கள் எனக்கு ஒரு சின்ன உபகாரம் செய்ய வேண்டும். என் மனைவி பாவம், சத்தமிருந்தால் தூங்கவே மாட்டாளாம். நாளைக் காலையிலிருந்து உங்கள் அறையிலேயே வந்து துணியைத் துவைத்துக் கொள்ளலாம் என்று நினைக்கிறேன். நீங்களும்தான் விடியற்காலையில் எழுந்திருக்கத்தான் முடியவில்லை என்று ரொம்ப நாளாகச் சொல்லிக் கொண்டிருக்கிறீர்களே!" என்றார் ராமமூர்த்தி மெதுவாக.

சந்திரனைத் திரும்பிப் பார்த்தேன். அவன் கழட்டிய சட்டையைத் திரும்பவும் மாட்டிக் கொண்டு, வேகமாகப் போய்க் கொண்டிருந்தான்!

# கடவுள் கொடுத்த வரம்

வெகு காலத்துக்கு முன்பு சீனவை சின் ஜே ஜ்வாங் என்னும் அரசன்' ஆண்டு வந்தான். நியாயத்துக்கும், நேர்மைக்கும், குடி படைகளிடம் உள்ள அன்புக்கும் பாசத்துக்கும் அவன் ஏழேழு தீவுகளிலும் மிகவும் பிரசித்தி பெற்றிருந்தான். அவன் நியாயாசனத்தில் அமர்ந்து விவேகத்துடனும் நியாய புத்தியுடனும் வழங்கும் தீர்ப்புக்களைக் கண்டு தெய்வங்கள் கூடத் தலை வணங்கின. அவன் சொற்களில் சத்தியம் என்னும் மலர்கள் மலர்ந்தன. பாலையும் தண்ணீரையும் பிரித்துக் காட்டும் அன்னப் பறவையைப் போல அவன் தீர்ப்புக்கள் வழங்கி வந்தன.

ஆனால் அரசனுக்குத் தன் தீர்ப்புக்களில் நிலை கூடத் திருப்தி உண்டாவதில்லை. எவ்வளவு நெறி வழுவா மன்னனாக இருந்தாலும் தன் தீர்ப்பில் எங்கேயாவது தவறு ஏற்பட்டு விட்டால் என்ன செய்வது என்ற அச்சம் ஏற்படுவது சகஜந்தானே? தன் தீர்ப்பு சரியானது என்பதைத் தெரிந்து கொள்ள வழி என்னவென்று சிந்தித்தான். அதற்கு ஒரு வழியும் தென்பட்டது. ஆகவே, அவன் அடிக்கடி, நிமிஷத்துக்கு நிமிஷம் ஆண்டவனிடத்தில் 'தன்னை அந்தர்யாமியாக—உள்ளத்தில் உள்ளதை உள்ளபடி அறியும் திறமை வாய்ந்தவனாக ஆக்க வேண்டும். பிறர் உள்ளத்து உணர்ச்சிகளைப் படித்து உணரும் தன்மை தனக்கு வரவேண்டும்' என்று வேண்டிக் கொண்டான்.' ஆண்டவன் அரசனை எவ்வளவோ சமாதானப் படுத்திப் பார்த்தார். ஆனால் அவன் தன் பிடிவாதத்தை விட வில்லை. தன் எண்ணம் ஈடேறத்தான் வேண்டும் என்று பிடிவாதம் பிடித்தான். கடைசியில் அவன் எண்ணம் ஈடேறியது. அவன் அந்தர்யாமியாக, அதாவது உள்ளத்தில் உள்ளதை உள்ளபடி அறிந்து கொள்ளும் திறன் வாய்ந்தவனாகி விட்டான்.

மறுநாள் தன் கண்கள் கோடி சூரியப் பிரகாசத்தைக் காட்டிலும் ஒளி வாய்ந்தனவாக ஆகி விட்டதை அரசன் உணர்ந்தான். திறந்த புத்தகத்தைப்போல உலகத்தின் உள்ளம் முழுவதையும் படிக்கும் திறன் தனக்குக் கிடைத்து விட்டதை நினைத்து மனம் பூரித்தான். பிறகு தன் குடும்பத்தில் உள்ளவர்கள், தன் குடிபடைகள் முதலியவர்களின் மனத்தையும் மனக்கோட்டைகளையும் தன் மனக் கண் மூலம் படிக்க முற்பட்டான். அப்பொழுது தான் அவனுக்குக் கடவுள் சொன்னதன் உண்மை தென்னென விளங்கியது.

அவன் தர்பாரில் உள்ளவர்களே அவனைச் சிம்மாசனத்திலிருந்து இறக்கச் சூழ்ச்சி செய்து கொண்டிருந்தார்கள்.

அவன் மனைவியே அவனுக் கெதிராக அடிக்கடி எதிரித் தலைவர்களுக்கு உதவக் கோட்டை கட்டிக் கொண்டிருந்தாள்.

அவனுடைய சேனைத் தலைவனே எதிரி அரசனைச் சீனவின் மீது படை எடுக்க கூப்பிட்டுக் கொண்டிருந்தான்.

அவனுடைய மகன் தன் தகப்பன் எப்பொழுது சாவான் என்று ஆண்டவனைக் கெஞ்சிக் கேட்டுக் கொண்டிருந்தான்.

அவனுடைய குடி படைகளிலும் பலர் அடுத்த வீட்டுக்காரர்களை எப்படிக் கொள்ளையிடலாம் என்று குருட்டு யோசனை செய்து கொண்டிருந்தார்கள்.

பெரிய பெரிய யோகிகளின் உள்ளங்கள் கூடச் சிற்றின்பத்தை நாடிப் பேரின்பத்தை மறந்து கொண்டிருந்தன.

இதை யெல்லாம் கண்ணுற்ற அரசன் வீறிட்டுக் கத்தி விட்டுக் கண்களை இறுக மூடிக் கொண்டான். அவனுக்கு மிகவும் தர்ம சங்கடமாகப் போய் விட்டது. அவன் என்ன செய்வான்? குடிபடைகளனைத்தையும் கொன்று போடுவதா? அல்லது அந்த நரகத்திலிருந்து தப்புவதற்காக அவனே எங்காவது ஓடி விடுவதா? காட்டுத் தீ போலக் கெடுதல்களை நாற்புறமும் வளர்ந்தெரிவதாகத் தோன்றியது. அவன் ஒன்றும் புரியாமல் தன் தலை மயிரைப் பிடித்துப் பிய்த்துக் கொள்ளலானான். பிறகு முழங்கால்களை மண்டியிட்டுக் கொண்டு 'தேவ, கடவுளே! நீ கொடுத்த வரத்தைத் திருப்பி வாங்கிக்கொண்டு என்னை ஆளை விடு. எனக்கு உன்னுடைய அந்தர்யாமிப் பதவி வேண்டாம், வேண்டவே வேண்டாம். அந்தப் பதவி உனக்கே இருக்கட்டும். அது உனது ஏக போக உரிமையாகவே இருந்து விட்டுப் போகட்டும். என்னை மீண்டும் மனிதனாகவே ஆக்கி விடு. உன் பரிசுத்தமான நிழலில் உட்கார்ந்தவாறு உன் எண்ணங்களை ஈடேற்றிப் பூர்த்தி செய்து வருகிறேன். இந்த நரகத்திலிருந்து உன் கருணைக் கரத்தினால் என்னைக் காத்து ரக்ஷிப்பாயாக! கடவுளே, படமுடியாது இனித் துயரம்!" என்று வேண்டினான்.

ஜ. வீ.

## திருத்தம்

ஆகஸ்டு 31உ "கல்கி" இதழில் 55ம் பக்கத்தில் வெளியாகி யிருக்கும் சென்னை சர்க்கார் கைத்தொழில் & வர்த்தக இலாகாவின் "அடமின்" விளம்பரத்தில் கேரளா சோப் இன்ஸ்டிட்யூட், கோழிக்கோடு என்பதற்குப் பதிலாக, கவர்ன்மெண்ட் ஆயில் பாக்டரி, கோழிக்கோடு என்று திருத்தி வாசிக்க வேண்டும்.

வரண்ட,
எரிச்சலுள்ள
இருமல்களுக்கு







# க்ளைகோடின்-
# டெர்ப்-வசாகா

அலெம்பிக்கின் நம்பிக்கைவாய்ந்த இருமல் நிவாரணி




டாக்டர்கள் இந்த அற்புதமான பெப்ஸை சிபார்சு செய்கிறார்கள்

# PEPS

இருமல், ஜலதோஷம், குளிர், தொண்டைப் புண், இன்புளுயன்ஸா சளி ஜுரம், மார்வலி, சுவாச கோசநோய்கள் முதலியவற்றிற்கு உகந்தது. இருமுவதால் உங்கள் இருதயமும், சுவாச கோசங்களும் பாதிக்கப்படுகின்றன. பெப்ஸ் மாத்திரைகள் இருமலைப் போக்கி விரைவில் குணம் தரும். பெப்ஸ் மென்று உட்கொள்ளும்போது மணம் வாய்ந்த மருந்துச் சத்துக்கள் தொண்டையிலிருந்து சுவாசக் குழாய்கள் வழியாக சுவாச கோசங்களுக்குச் செல்லுகின்றன. தொண்டைக்கும் இருதயத்திற்கும் இதமளிக்கிறது பெப்ஸ். அது அபாயகரமான கிருமிகளை நாசம் செய்கிறது. சளியினால் ஏற்படும் தொல்லைகளுக்கு பெப்ஸ் சிறந்த நிவாரணி. பெப்ஸ் இதமும் பலமும் தருகிறது. பெப்ஸ் அற்புதமான மருந்து.

**பெப்ஸ், தொண்டைப்புண், மார்வலி நோய் நிவாரண மாத்திரைகள்** PPY:4

மதராஸிற்கு ஸோல் ஏஜண்டுகள் : தாதா & கம்பெனி, பார்க் டவுன்

---

# நல்லாடை அணிந்த ஆண்கள்

# பளபளப்பான



# பாதரக்ஷைகளை அணிகிறார்கள்

உலகில் சிறந்த ஆடைகளை நீங்கள் அணியலாம். ஆனால் பாதரக்ஷைகளை கொண்டுதான் உமது நாகரீகத்தை மதிப்பிடுவார்கள். நல்லாடையுடுத்த ஆண்கள் எல்லோரும் பளபளப்பான பாதரக்ஷைகளையணிகிறார்கள். உலகமெங்கும் வெற்றிக்கு முதல்படியது. பாதரக்ஷையை கவனியுங்கள்—கிவி பாலிஷை உபயோகியுங்கள். அது அவற்றை மென்மையுறக்காப்பதுடன், பளபளப்பாகவும் பிரகாசமாகவும் இருக்கச் செய்கிறது. கிவி பாலிஷ் வேண்டுமென்று கேளுங்கள். எப்போதும் நல்ல தோற்றமளிக்க வேண்டுமென்று கருதுங்கள்.

# கீவி

பாலிஷ் செய்யும் போதே போஷாக்களிக்கிறது.




விநியோகஸ்தர்கள் : ஜியாப்ரே மானர்ஸ் கம்பெனி, லிமிடெட்

# ஆரோக்கிய ரகசியம்

**வி. என். குமாரசாமி**

## 34. சந்தேக விளக்கம்

அன்பர்களில் சிலர் குடும்ப விஷயங்களைக் குறித்தும் சொந்த அந்தரங்கமான விஷயங்களைக் குறித்தும் பல கேள்விகள் கேட்டு அதை இச் சந்தேக விளக்கப் பகுதியில் எழுதும்படி கேட்கின்றனர். இம்மாதிரி விஷயங்களெல்லாம் அவ்வளவு பகிரங்கமாய் இப் பகுதியில் விளக்குவது கஷ்டம். அதைத் தவிர இவ் விஷயங்களெல்லாம் சிறுவர்கள் முதல் பெரியோர்கள் வரை ஆண் பெண் சகலரும் படிப்பதனால் ஒரு அளவோடுதான் எழுத முடியுமென்பதைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

ஆரோக்கிய ரகஸ்யம் படித்து ஆசனங்களைப் பழகும் இலங்கை அன்பர்கள் பலர் சேர்ந்து கையொப்பமிட்டுப் பல கேள்விகளைக் கேட்டிருக்கின்றனர். அதில் அதிகமான முஸ்லீம் கண்பர்களும் சேர்ந்திருப்பது குறிப்பிடத்தக்கது. அவர்களின் ஆர்வத்தைக் கண்டு ஆனந்தமடைகிறேன்.

கடிதம் :—அன்புள்ள ஐயா! நாங்கள் பலர் ஒன்று கூடி "கல்கி"யில் தங்கள் ஆரோக்கிய ரகஸ்யக் கட்டுரைகளைப் படித்து அதன்படி ஆசனங்களைப் பழகிப் பல நல்ல பலன்களைக் கண்டுள்ளோம். எங்களுக்குச் சில சந்தேகங்கள் ஏற்பட்டு விட்டன. தயவு செய்து அவைகளை விளக்கும்படியாகக் கேட்டுக் கொள்ளுகிறோம்.

கேள்வி :—எண்ணெய் தேய்த்துத் தலை முழுகிய பின் ஆசனங்கள் செய்யலாமா? அப்படி ஆசனம் செய்யக் கூடாது என்றால் பத்மாசனம் சித்தாசனம், சாந்தி ஆசனம், நாடி சுத்தி முதலிய வற்றையாவது செய்யலாமா?

பதில் :—ஆசனங்கள் செய்து அரை மணி நேரம் பொருத்து எண்ணெய் தேய்த்துத் தலை முழுகலாம். முதலில் எண்ணெய் தேய்த்து ஸ்நானம் செய்த பின் ஆசனங்களைச் செய்யக் கூடாது. அப்படி ஒருகால் ஆசனங்கள் செய்ய முடியாமல் அவசரமாய் எண்ணெய் தேய்த்துக் குளிக்க வேண்டிய அவசியம் ஏற்பட்டால், அன்று பத்மாசனம், அல்லது சித்தாசனத்தில் உட்கார்ந்து நாடி சுத்தியை மட்டும் செய்யலாம். ஆசனங்களையே செய்யாதபோது சாந்தி ஆசனத்துக்கு அவசியமில்லை யல்லவா?

கேள்வி :—தடுமன் (ஜல தோஷம்) பிடித்து இருக்கும்போது ஆசனம் செய்யலாமா?

பதில் :—லேசாய்த் தடுமன் இருந்தால் ஆசனங்கள் செய்வதற்குத் தடையில்லை. ஆனால் அதிக சளியும் மூக்கில் நீர் சதா வடிந்து கொண்டு உபத்திரவமாய் இருக்கும்போது ஆசனங்கள் செய்யக் கூடாது. நாடி சுத்தியை மட்டும் சிறிது அதிக நேரம் செய்யலாம். ஒரு நாளைக்கு மூன்று அல்லது நான்கு முறை அதாவது காலை பகல் மாலை இரவு இம்மாதிரி பல முறை செய்தால் ஜலதோஷம் சீக்கிரம் விலகும்.

கேள்வி : சாப்பிட்டு விட்டுப் படுக்கும் போது சாந்தி ஆசனம் செய்தவாறே தூங்கலாமா?

பதில் : முதலில் சாப்பிட்டவுடன் படுப்பதென்பது கூடாது. சாப்பிட்டுக் குறைந்தது இரண்டு மணி நேரமாவது ஆக வேண்டும் படுக்கைக்குச் செல்ல. மூன்று மணி நேரம் கழித்துப் படுத்தால் இன்னமும் சிலாக்கியமே. வயிற்றில் ஆகாரம் பாதிக்கு மேல் ஜீரணமாய் இருக்க வேண்டும். அல்லது அநேகமாய் ஜீரணமாகி முடியும் நிலைமையில் படுத்தால் தூக்கம் அமைதியாய் வரும். அப்படி இல்லாமல் சாப்பிட்டவுடன் படுத்தால் அமைதியாய்த் தூக்கம் வராது. தூங்கும் போது உடல் அவயவங்கள் ஓய்வு பெறுகிறது. அப்பொழுது இருதயத்திற்கும் சற்று ஓய்வு ஏற்படுகிறது. அதனால் இருதயம் தன் வேலையைச் செய்யாமல் நின்று விடுகிறது என்று அர்த்தமல்ல. சாதாரணமாய்ப் பகல் நேரங்களில் பல வேலைகள் செய்யும்போது அதற்குத் தக்கபடி இருதயமும் வேகமாக வேலை செய்ய வேண்டியதாய் இருக்கிறது. இரவில்தான் அதற்கு அதிக வேலையில்லாமல் சாதாரணமாய் இருக்க முடியும். அப்படியிருக்க வேண்டிய இருதயத்திற்கு, சாப்பிட்டவுடன் படுத்தால் அவ்வுணவை ஜீரணம் செய்ய ரத்தாசயம் மறுபடியும் அதிக ரத்தத்தை உணவுப் பைக்கு அனுப்ப வேண்டியதாய் இருக்கும். அதனால் நிம்மதியான தூக்கம் கிடைக்காது. சிரசு முதல் மற்ற பல பாகங்களுக்குப் போகும் ரத்தமும் உணவுப் பைக்குப் போய் வேலை செய்வதால் கனவுகள் சதா வந்து கொண்டிருக்கும். அதிலும் நல்ல கனத்த ஆகாரம் சாப்பிட்டு விட்டுப் படுத்தால் பயங்கர கனவுகள் காணச் சொல்ல வேண்டியதேயில்லை.

தூக்கம் வராதவர்கள் மட்டும் சாந்தி ஆசனம் செய்து தூக்கம் வர தன்மொழி ஜபம் செய்தால் வரும் என்று சொல்லியிருக்கின்றேனே தவிர எல்லோரும் அவ்வாறு தூங்க வேண்டிய அவசியமில்லை. ஏனெனில் சாந்தி ஆசனம் செய்தவாறே தூங்கினால் மல்லாந்தபடி படுக்க நேரும். அப்படிப் படுப்பது சரியல்ல. சிலருக்கு அப்படி மல்லாந்து உறங்கினால், வயிறு பருத்து பூமியின் ஆகர்ஷண சக்தியினால் இருதயத்தை யாரோ மேலிருந்து அமுத்துவது போல் தோன்றும். இதைச் சிலர் பேய் என்றும், பிசாசு என்றும் அது மார்பின் வந்து உட்கார்ந்து அமுத்துகிறதென்றும் பாறாங்கல்லைப் போல் அவ்வளவு பளுவாய் இருந்ததென்றும் சொல்லுவார்கள். அவை யெல்லாம் சுத்தப் பொய். அதனுடன்கூட வயிற்றில் ஆகாரத்துடன் மல்லாந்து படுத்தால் பயங்கரக் கனவில் வரும் பூதமே நிஜமாய் மார்பில் வந்து உட்கார்ந்து விட்டதைப் போலச் சிலர் தூக்கத்தில் பயந்து புலம்புவார்கள். சாந்தி ஆசனம் செய்தவாறு மல்லாந்து படுக்கக் கூடாது.

அப்படிச் சாந்தி ஆசனம் செய்து விட்டுப் படுக்க வேண்டுமானால் சாந்தி ஆசனம் செய்து அதைக் கலைத்துப் பின் படுத்தவாறே இடதுபக்கம் புரண்டு படுக்கலாம்.

இப்படிப் படுப்பதிலும் சில அபிப்பிராய பேதங்களுண்டு. தற்கால டாக்டர்கள் "இடது புறம் படுத்தால் ஆகாரப்பை கசங்குகிறது. ஜீரணத்துக்குத் தடையாய் இருக்கும். ஆகையால் வலதுபுறம் படுப்பது நல்லது" என்று சொல்லுகிறார்கள். பழைய வைத்திய சாஸ்திரத்திலும் யோக நூல்களிலும் "இடது பக்கம் படுப்பது தான் நல்லது. அப்படிப் படுப்பதனால் வலது



82 வயது நிரம்பிய இந்த அம்மையார் விபரீத கரணி ஆசனம் செய்து, இருபது வருஷங்களுக்கு மேல் எத்தனையோ விதமான வைத்தியங்களினால் தீராமல் இருந்த முழங்கால் வாதத்தையும் அதனால் இருந்து வந்த வலியையும் போக்கிக் கொண்டார். இப்போது அவர் நல்ல ஆரோக்கியத்துடன் இருக்கிறார்.

---

நாடி (சூரிய கலை)யின் வழியாக மூச்சு நடைபெறும். அது ஆயுள் விருத்திக்கு நல்லது" என்று இருக்கிறது. மற்றும் சில மேல் நாட்டு அறிஞர்கள் "இப்படியெல்லாம் படுக்கக்கூடாது. குழந்தைகளைப் போலக் குப்புறப் படுப்பதே நல்லது" என்கிறார்கள். ஆனால் நடைமுறையில் இம்முறை சிலருக்குக் கஷ்டமாய் இருக்கிறது. சிலருக்கு மார்புவலி எடுக்க ஆரம்பித்து விடுகிறது. எனவே இவைகளையெல்லாம் ஆராயும்போது நமக்குப் படுப்பது எப்படியென்று ஒரு முடிவுக்கு வர வேண்டியதாய் இருக்கிறது. சாப்பிட்டு இரண்டு மூன்று மணி நேரம் பொருத்துப் படுப்பதால் இடது கைப் பக்கம் படுப்பதால் ஆகாரப்பை அழுக்கம் ஏற்பட்டு ஜீரணம் ஆக தடையேற்படும் என்ற பிரச்னை ஒருவாறும் மறைந்து விடுகிறது. எனவே இடது கைப்புறமாகப் படுப்பதே நல்லது. நமது பெரியோர்கள் கண்ட உண்மைப்படி நமது ஆயுளும் நீளும். ஆனால் இரவு முழுதும் இடது புறமாகவே படுத்திருப்பதும் கூடாத காரியம். சில சமயம் வலது புறமாகப் புரண்டு படுத்தாலும் அதனால் கெடுதல் ஒன்றும் ஏற்பட்டு விடாது. எனவே, அநேகமாய் இடதுபுறமாகவும் சிறிதுநேரம் வலது புறமாகவும் படுப்பதே நல்லது. மல்லாந்தோ குப்புறவாகவோ படுப்பது அவ்வளவு நல்லதல்ல.

கேள்வி:—நாட்டு மருந்துகள் அல்லது ஆங்கில மருந்துகளைச் சாப்பிட்டுக் கொண்டிருக்கும் போதும், ஊசிகளைப் போட்டுக் கொண்டிருக்கும் போதும் ஆசனங்களைச் செய்யலாமா?

பதில்:—அந்தந்த வியாதிகளைப் பொருத்தும், அதற்காக உபயோகிக்கும் மருந்துகளைப் பொருத்தும்தான் இதற்குச் சரியான விடை அளிக்க முடியும். இதை நல்ல அனுபவமுள்ள உடற் கூறுகளை நன்கு அறிந்த ஆசன ஆசிரியர்களிடம் கேட்டுத்தான் செய்ய வேண்டும். அநேக நோய்கள் எந்த மருந்துமில்லாமல் ஆசன, உணவு சிகிச்சையினாலேயே குணமாய்விடும். சில நோய்களுக்குச் சில மருந்துகளுடன் ஆசனங்களும் செய்ய வேண்டியதாய் இருக்கும். பொதுவாய் ஆசனங்களைச் செய்தால் உடல் உஷ்ணமாகவே யிருக்கும். அவ்வப்போது இன்னமும் உஷ்ணமாகும் வகையில் மருந்துகள் அருந்தினால் ஆசனம் செய்து நன்மை உண்டாவதற்குப் பதில் தீமை உண்டாகும். ஆனால் பழி என்னமோ ஆசனங்கள்மேல் சுமத்துவார்கள். ஆகையால் நன்கு சந்தேகமறத் தெரிந்த பின்தான் மருந்துகளை உபயோகிக்க வேண்டும்.

கேள்வி:—மூலம் பவுத்திர ஆப்பரேஷன் செய்து கொண்டவர்கள் தாங்கள் சொல்லி வரும் எல்லா ஆசனங்களையும் செய்து வரலாமா?

பதில்—பேஷாய்ச் செய்யலாம். தடையேதுமில்லை. ஆனால் நேரத்தைக் குறைக்க வேண்டும்.

கேள்வி:—ஆசனம் செய்கிறவர்கள் பேதிக்குச் சாப்பிடலாமா? அப்படிச் சாப்பிட்டால் அன்று எல்லா ஆசனங்களையும் செய்யலாமா? அல்லது சாந்தி ஆசனம் நாடி சுத்தியாவது செய்யலாமா?

பதில்:—ஆசனம் செய்கிறவர்கள் பேதிக்கு மருந்து சாப்பிட வேண்டிய அவசியமில்லை. அதிலும் உட்டியாண, நௌலி போன்ற குடல் பயிற்சிகளைச் செய்கிறவர்களுக்குப் பேதி மருந்தின் அவசியமே யில்லை. அன்றாடம் சேர்ந்த அழுக்குகள் அவ்வப்போது வெளியேறிவிடும். தேவையானால், ஓரிரு வேளை பட்டினி இருக்கலாம்.

கேள்வி:—குளிர்ப் பிரதேசம், வெப்பப் பிரதேசம் ஆகிய இவைகளில் உள்ளவர்கள் ஆசனங்களைச் செய்தால் அவர்கள் குளிக்கவும், குடிக்கவும் எந்த ஜலத்தை உபயோகிக்கலாம்? சுடு தண்ணீர் நல்லதா? குளிர்ந்த ஜலம் நல்லதா?

பதில்:—ஐயாயிரம் அடியிலிருந்து ஏழாயிரம் அடிக்கு மேல் உள்ள பிரதேசத்திலுள்ளவர்களுக்குக் குளிர் அதிகமாய் இருக்குமாகையால், அவர்கள் லேசான வெந்நீரில் குளிப்பதுதான் நல்லது. சமதரையில் அதாவது உஷ்ணப் பிரதேசத்திலுள்ளவர்கள் குளிர்ந்த ஜலத்தில் குளிப்பதுதான் நல்லது. சிறு குழந்தைகள், வயோதிகர்கள் மட்டும் லேசான வெந்நீரை உபயோகிக்கலாம். ஆனால் குடிப்பதற்கு மட்டும் எந்தப் பிரதேசத்திலுள்ளவர்களானாலும் நன்கு கொதிக்கக் காய்ச்சி, ஆற்றி வடிகட்டின ஜலம்தான் குடிக்க வேண்டும்.

மற்ற கேள்விகளுக்கு அடுத்து வரும் சந்தேக விளக்கத்தில் விளக்கப்படும்.

அறுபது வயதான அம்மையார் ஒருவர் வாதத்தால் முழங்கால், குதிக்கால், ஆகியவற்றில் நோயுள்ளவர். தனக்கு இவ்வளவு வயதாகி விட்டதே, ஆசனம் செய்து இந்த நோயைப் போக்க முடியுமா? என்று கேட்கிறார். இத்துடன் ஒரு பெரிய அம்மாளின் புகைப்படம் வெளி வருகிறது. அவர் வயது 82. அவர்கள் விபரீத கரணியைச் செய்வதைப் பாருங்கள். அவர்கள் இதைச் செய்து முழங்கால் வாதத்தைப் போக்கடித்துக் கொண்டார்கள். வயதானவர்கள் விபரீத கரணி ஒன்றை மட்டும் தான் செய்ய முடியும். சாந்தி ஆசனம் நாடி சுத்தி செய்யலாம். (தொடரும்)



## உங்கள்

## குழந்தைகள் எளிதில்

## சோர்வடைகின்றனரா?

சாதாரண ஆரோக்கியமான குழந்தைகள் ஓடி ஆட விரும்பும். இதனால் அவர்களின் சக்தி துரிதமாக செலவடைகிறது. அன்றாடம் செலவாகும் சக்தியை ஈடு செய்து வளர்ச்சி தர சாதாரண உணவு போதுமானதல்ல. குழந்தைகள் சுறுசுறுப்பின்றி வாட்டமுற்றிருந்தால் அவர்களின் போஷணைக் குறைவை நிவர்த்திக்க, அவர்களுக்கு புஷ்டியான, ஜீரணமாகக்கூடிய அதிகப்படியான போஷணை தேவை. ருசி மிகுந்த ஓவல்டின் சுறுசுறுப்பையும் வலிமையையும் அளிக்கும். பழுத்த பார்லிமால்ட், ஆடை நிரம்பிய சுத்தமான பசும்பால், சிறந்த கொக்கோ, இயற்கையான பாஸ்பேட்டுகள், பி & டி விடமின்கள் சேர்ந்து, அது உன்னத குடும்ப உணவு பானமாக விளங்குகிறது. போலிகளைத் தள்ளி விடுங்கள்.




விநியோகஸ்தர்கள் :

கிரஹாம்ஸ் டிரேடிங் கோ. (இந்தியா) லிட்.

# ஓவல்டின்

**உறுதியான வலிமையான வளர்ச்சிக்கு!**

OV.593




புஷ்யன்

சீதாராமனுக்குக் கொஞ்ச நாட்களாகவே உடம்பு சரியில்லை. ஆபீஸிற்கு லீவு போட்டு விட்டுப் பேசாமல் கட்டிலில் படுக்கையை விரித்து விட்டுப் படுத்தான். அவனுடைய கண்களுக்கு எதிரில் சுவரில் மாட்டியிருந்த அவன் தாயாரின் புகைப் படம் தென்பட்டது. அதில் அவன் தாயார் அன்பும் கருணையும் ததும்ப ஏக்கத்துடன் பார்த்துக் கொண்டிருந்தாள்.

அவனுடைய தாயாரை போட்டோ எடுக்க வேண்டுமென்று வெகு நாட்களாக வற்புறுத்தி வந்தான். "என் போட்டோ எதற்கடா!" என்று அவள் தட்டிக் கழித்து வந்தாள். ஆனால் அவன் விடவில்லை. கடைசியில் அவனுடைய கட்டாயத்தின் பேரில் அவள் தன்னைப் போட்டோ எடுக்க ஒப்புக் கொண்டாள். போட்டோ எடுத்தபோது அவள் அவனையே அன்போடு பார்த்துக் கொண்டிருந்தாள். அவனுக்கு அவள் மீதிருந்த அன்பின் பெருமிதமும் அதில் தெரிந்தது. அந்த பாவம் அப்படியே அதில் விழுந்து விட்டது. ஆனால் அந்த அன்போடும் பெருமிதத்தோடும் ஒருவித ஏக்கம் குடிகொண்டிருந்தது.

சீதாராமன் அந்தப் போட்டோவையே பார்த்துக் கொண்டிருந்தான். அவனுக்கு முதலில் அவளுடைய பார்வையில் காணப்பட்ட அன்பும் பெருமிதமும் வரவர மறைந்து அதில் காணப்படும் ஏக்கமும், வேதனையும் பெரிதாகத் தென்பட ஆரம்பித்தது. அது மேலும் வளர்ந்து அவன் உள்ளத்தில் ஊடுருவிப் பாய்ந்து சென்றது.

அவன் சிறிது நேரம் கண்களை மூடிக் கொண்டான். சற்று நேரம் அப்படியும், இப்படியும் புரண்டு படுத்தான்; தூங்கி விட்டான்.

## 2

சீதாராமன் செங்கற்பட்டு ஜில்லா போர்டு ஆபீஸில் குமாஸ்தாவாக இருந்தான். அவன் சிறு குழந்தையாயிருக்கும்போதே அவன் தகப்பனார் ஒரு மோட்டார் விபத்தில் இறந்து விட்டார். ஆனால் அவர் தன் குடும்பத்தை அநாதரவான நிலையில் விட்டுப் போகவில்லை. பூர்வீகச் சொத்து அவருக்கு நிறைய இருந்தது. சீதாராமனுடைய தாயார் கெட்டிக்காரி, தைரியசாலி. திறமையாகக் குடும்பத்தை நடத்தும் சக்தி உள்ளவள். அவள் தன் இரண்டு மூத்த பெண்களையும், சீதாராமனையும் கண்ணும் கருத்துமாய் வளர்த்தாள்.

பெண்களுக்குத் தக்க வயது வந்ததும் நல்ல இடமாகப் பார்த்துக் கல்யாணத்தையும் செய்து விட்டாள். பிறகு அவளுக்குச் சீதாராமன்தான் எல்லாம். அவன் நன்றாய்ப் படித்துப் பி.ஏ. பட்டமும் பெற்றான். உடனே ஜில்லா போர்டு ஆபீஸில் வேலையும் கிடைத்தது. எட்டு வருடமாக அதே உத்தியோகம்தான். உத்தியோகம் செய்துதான் சாப்பிடவேண்டும் என்பதில்லை. இருந்தாலும் காலத்தை வீணாக்க விரும்பாமலிருந்த கருத்தோடு வேலை செய்து வந்தான்.

அமிர்தம்மாளுக்கு எந்தக் குறையும் இல்லை. தன் இரண்டு பெண்களையும் நல்லபடியாக வளர்த்து நல்ல இடத்தில் வாழ்க்கைப் படுத்தி அவர்கள் குழந்தையும் குட்டியுமாக வாழ்வதைப் பார்த்துக் கொண்டிருக்கிறாள். அவளுடைய மகனும் படித்துப் பெரியவனாகி எல்லா நற்குணங்களும் அமையப் பெற்று உத்தியோகத்தில் அமர்ந்து இருக்கிறான். அவன் தன் தாயிடம் எல்லையற்ற அன்பைச் சொரிகிறான். அவள் சொல்லைத் தட்டி இதுவரை ஒரு காரியமும் செய்தது கிடையாது. அவளுக்கு இனி என்ன குறை!

ஒரே ஒரு குறை மட்டும் இருந்தது. அது எல்லா தாய்மார்களுக்கும் இருக்கும் குறைதான். அதுதான் அவளைக் குடும்பஸ்தனாக்கி இந்த வீட்டுக்கு விளக்கேற்றி லக்ஷ்மீகரமாக்க ஒரு நாட்டுப் பெண்ணைக் கொண்டு வரவேண்டியது. இதென்ன பிரமாதம்! அவள் மூச்சு விட்டால் நான் நீ என்று போட்டி போட்டுக் கொண்டு தங்கள் பெண்களை கொடுக்க முன் வரமாட்டார்களா!

ஆனால் அவள் மகனுக்கு இன்னும் பெண் தேடப் புறப்படவில்லை. பெண் தேடுவதென்ன! அவளுடைய சகோதரன் பெண் பிரேமாவே இருக்கிறாள். சீதாராமன் கல்யாணம் செய்து கொள்ளச் சம்மதிக்க வேண்டியதுதான் பாக்கி.

அன்று சீதாராமனுடைய பிறந்த நாள். இருபத்தைந்து வயது பூர்த்தியாகி விட்டது. அன்று இரவு சாப்பிட்டுக் கொண்டிருந்தான்.

"சீதாராமா! ஒரு விஷயம்! ரொம்ப நாளாகச் சொல்ல வேணும் என்று......" என்று ஆரம்பித்தாள் தாயார்.

சீதாராமன் ஆச்சரியத்துடன் தன் தாயாரை ஏறிட்டுப் பார்த்தான்.

"என்னம்மா, சொல்லுங்கள். ஏன் தயங்குகிறீர்கள்!" என்றான் ஆவலோடு.

"ஒன்றுமில்லை. இந்த வீட்டுக்கு ஒரு லக்ஷ்மி வரவேணும் என்று ஆசை. உனக்கும்தான் வயதாகி விட்டது. என் ஆசை யெல்லாம் இதுவரை நிறைவேறி விட்டது. இது ஒன்றுதான் பாக்கி.

அப்புறம் நான் என்றைக்கு வேண்டு மானாலும் கண்ணை மூடலாம்......"

சீதாராமன் சட்டென்று பதில் சொல்லவில்லை.

"உங்க மாமா பெண்ணுக்கு வயசாகி விட்டது. அவளுக்குக் கல்யாணம் பண்ணத் தவிக்கிறான். உனக்குக் கொடுக்க வேணும் என்று அவனுக்குக் கொள்ளை ஆசை. நம்ம குடும்பத்துக்கு அவள் தான் ஏற்றவள். உனக்குச் சம்மதந்தானே?"

சீதாராமன் மௌனமாக இலையையே பார்த்துக் கொண்டிருந்தான்.

அவனுடைய மனம் அப்போதைய நிலையில் குழம்பிக் கிடந்தது. ஒருவாறு சமாளித்துக் கொண்டு, "என் கல்யாணத்துக்கு இப்போது என்னம்மா அவசரம்!" என்றான்.

"என்ன அவசரமா! இருபத்தைந்து வயது நேற்றோடு ஆகிவிட்டதே. இந்த வயதில் எனக்கு ஒரு பேரனையல்லவா நீ பெற்றுக் கொடுத்திருக்க வேண்டும்" என்றாள் அமிர்தம்மாள்.

"அம்மா, எனக்கென்னவோ விவாகம் செய்ய வேண்டிய அவசரம் ஏதும் இப்போது இருப்ப தாகத் தெரியவில்லை. பின்னால் எப்போதாவது தோன்றினால் பார்த்துக் கொள்ளலாம்" என்று ஒருவிதமாக அன்றையப் பேச்சுக்கு ஒரு முற்றுப் புள்ளியை வைத்து முடித்தான்.

அமிர்தம்மாளும் அவனை விட்டுப் பிடிக்கவே விரும்பினாள். அன்று அத்துடன் முடிந்தது. ஆனால் தினசரி இவ்விஷயமாக ஓரிரு வார்த்தை களைப் பேசாமல் விடவில்லை அவள். சீதாராம னும் அப்படி, இப்படி என்று ஏதோ பலப்பல காரணங்கள் கூறித் தட்டிக் கழித்து வந்தான்.

## 3

சீதாராமன் ஒரு நாளும் அவன் தாய் சொல்லைத் தட்டியதில்லை. அவள் விருப்பத்துக்கு மாறாக ஒரு காரியமும் செய்ததில்லை. ஆனால் தன் விவாக விஷயத்தில் மட்டும் அவள் விருப்பப்படி இசைந்து கொடுக்க முடியாமலிருந்தான். காரணம்:

சீதாராமன் கல்லூரியில் படித்துக் கொண்டிருந்தபோது அவனுடன் சந்திரா என்ற பெண் படித்து வந்தாள். அவளுடைய கட்டான தலை மயிரும், குறுகுறுப்பான கண்களும், கூர்மையான மூக்கும், மிருதுவான கன்னங்களும், குவிந்த உதடு களும், அவளுடைய நன்னும் நடையும் அவளை மிகவும் வசீகரமாக்கிக் காட்டின. சீதாராமன் அவளுடைய இயற்கைக் கவர்ச்சியில் மனத்தைப் பறி கொடுத்து விட்டான்.

சீதாராமன் ஆட்டம், போட்டிகளில் உற்சாகத் துடன் ஈடு பட்டிருந்தவனாதலால் அவன் பெயர் காலேஜில் முன்னணியில் இருந்தது. அவனுடைய கட்டுக் கோப்பான உடலமைப்பும், சிரித்த வதனமும் சந்திராவின் மனத்தில் பதிந்து விட்டன.

சீதாராமன் கொஞ்சமும் கூச்சமின்றி எல்லோரிடமும் பழகுவான். வெகு நாளைய சிநேகிதம் போல் உரிமையுடன் பேசி வாதாடுவான். நல்ல அறிவாளியான சந்திராவுக்கு அவனுடன் வாதாடி, வாதாடி எத்தனையோ விஷயங்களைத் தெரிந்துக் கொள்ள முடிந்தது. இனம் இனத்தோடு சேர் வதைப் போல் இரண்டு அறிவுச் சுடர்களும் ஒன் றாய்ப் பழகித் தங்கள் அறிவைப் பரிமாறிக் கொண்டு ஒன்றுக்கொன்று ஆதரவாய்க் கல்லூரி வாழ்வில் காலம் கடத்தி வந்தன. அந்த இரு உள்ளங்களும் நெருங்கிப் பழகப் பழக அன்பு கனிந்து காதல் உதயமாயிற்று.

ஆனந்தமாக நாட்களைக் கடத்தி வந்தனர். இது வரை கடற்கரையில் உட்கார்ந்து சங்கீதத்தைப் பற்றியும், உலக விவகாரங்களைப் பற்றியும் பேசி வந்தவர்கள் இப்போது காவியத்தையும் ஓவியத் தையும் பற்றிப் பேச ஆரம்பித்தார்கள். நட்சத் திரங்கள் கண் சிமிட்டுவதைப் பற்றியும் மணிக் கணக்கில் பேச ஆரம்பித்தார்கள். நிலவு சந்திராவின் முகமண்டலமாகவும், நட்சத்திரங்கள் சந்திராவின் கூரிய கண்களாகவும் சீதாராம னுக்குத் தோன்ற ஆரம்பித்தன.

இனி நம்மை இவ்வுலகத்தில் எந்தச் சக்தியும் பிரிக்க முடியாது என்று இருவரும் எண்ணி அன்புப் பிணைப்பில் ஒன்றி யிருந்தார்கள். நாள் தோறும் கடலருகில் உட்கார்ந்து பேசிக் களிக்கும் போது கடலலைகள் பாய்வது போல் அவர்களுடைய இரு இதயங்களிலும் அலைகள் மோதி இன்ப வெள்ளத்தைப் பாய்ச்சிக் காதலை வளர்த்து வந்தன. இருவரும் பொழுது போவதே தெரியாமல் அங்கு இன்பமயமாய் உரையாடிக் கொண்டிருந்து விடுவார்கள்.

அன்றும் அவ்விதம் அவர்கள் பேசிக் கொண் டிருந்தார்கள். சீதாராமன் அவள் கழுத்தில் புதி தாக ஒரு செயின் காணப்படுவதைக் கண்டு "சந்திரா, ஏது புதிதாக இருக்கிறது!" என்றான்.

"ஆமாம். என் சித்தப்பா காசியிலிருந்து வாங்கி வந்தார். நன்றா யிருக்கிறதா, பாருங்கள்!" என்று அதை எடுத்துக் கொடுத்தாள்.

சீதாராமன் அதைப் பார்த்தான். அதில் தொங் கிக் கொண்டிருந்த சின்னத்தைக் கண்டதும் அவ னுக்குத் தூக்கி வாரிப் போட்டது. விவரிக்க முடியாத வேதனை உள்ளத்தில் புகுந்து கொண் டது. மலையுச்சியிலிருந்து கீழே அதலபாளத்தில் விழுந்து விட்டது போல் தோன்றிற்று.

"சந்திரா, இது என்ன!" என்றான். அவன் குரலில் ஒரு பதட்டம் இருந்தது.

சந்திரா அவனை ஏறிட்டுப் பார்த்தாள். "ஏன், உங்களுக்குத் தெரியாதா, இதுதான் எங்கள் மதச் சின்னம், சிலுவை!" என்றாள்.

அவளுடைய வார்த்தைகளைக் கேட்டதும் சீதா ராமனுக்கு உலகமே சூன்ய மயமாய் விட்டது போல் தோன்றிற்று. கடலின் ஆர்ப்பரிக்கும் அலைகள் அவனை விழுங்க வருவது போல் தோன்



பையன் (பக்கத்து வீட்டு மாமா விடம்):—மாமா, எங்கப்பா உங்க ளிடமிருந்து கிராமபோன் ரிக்கார்டு கள் கேட்டு வாங்கிக் கொண்டு வரச் சொன்னார்.

அடுத்த வீட்டு மாமா:— என்ன என்ன ரிக்கார்டுகள் வாங்கிக் கொண்டு வரச் சொன்னார்?

பையன்:-எல்லாவற்றையும் வாங் கிக் கொண்டு வரச் சொன்னார். அவர் கொஞ்சம் நிம்மதியாகத் தூங்க வேணுமாம்!

றின. வானத்து நட்சத்திரங்கள் எல்லாம் செதறுண்டு ஒளியிழந்து ஒரே இருள் மயமாய் மாறி விட்டதாகவே அவனுக்குப் பட்டது.

"சந்திரா!" என்று பரிதாபமாக அழைத்தான்.

"ஏன் இப்படிப் பதறுகிறீர்கள்! உங்களுக்கு இத்தனை நாட்களும் தெரியாதா, நான் கிறிஸ்துவ மதத்தினள் என்பது! உங்களுக்குத் தெரியும் என்றல்லவா நினைத்தேன். மேலும் நீங்கள் ஜாதி மதங்களையெல்லாம் வேருடன் ஒழிக்க வேண்டும் என்று நம் கல்லூரியின் கூட்டத்தில் கூட பேசுவீர்களே! நீங்கள் எல்லாம் தெரிந்துதான் என்னை நேசித்தீர்கள் என்று நினைத்தேன்."

"சந்திரா, என்னை மன்னித்துவிடு. நம்மிருவரிடையே இருந்த அன்பும், நேசமும் வெறும் சிநேக பாவத்திலேயே இருப்பதாகப் பாவித்துக் கொள்வோம். ஆனால், சந்திரா! உண்மையைச் சொல்கிறேன். நான் உன்னை என் மனமாரக் காதலித்தேன். அது உள்ளத்தின் அடியிலிருந்து என்னையு மறியாமல் எழும்பியது. அது என்றும் மாறாதவை. சந்திரா, நீ கிறிஸ்துவ மதத்தினள் என்பதால் உன்மீது உள்ள காதல் சிறிதும் குறையவில்லை. ஆனால் என் தாயார் மிகுந்த ஆசார சீலமுடையவள். அவள் மிகவும் பக்தி, ஒழுக்கம் எல்லாமுடையவள். அப்பேர்ப்பட்டவள் உன்னை நான் மணப்பதை எப்படி ஒப்புக் கொள்வாள்! நீயே யோசித்துப் பார். அவள் மனம் புண்படும் காரியங்களைச் செய்ய என் மனம் சம்மதிக்காது. என்னை எவ்வளவோ அன்புடனும் ஆதரவுடனும் பெரிய பெரிய கனவுகள் எல்லாம் கண்டு வளர்த்திருக்கும் என் தாய்க்கு மாறான காரியத்தை நான் செய்யலாமா! நீயே சொல், சந்திரா!" என்று கெஞ்சும் குரலில் கூறினான் சீதாராமன்.

அவன் கூறுவதை யெல்லாம் சந்திரா மௌனமாகவும், சிரத்தையுடனும் கேட்டு வந்தாள். அவன் முகத்தையே உற்று நோக்கி வந்தாள். எவ்வளவு உருக்கமாகச் சொல்கிறான் என்பதை உணர்ந்தாள். அவளுக்கும் அதைக் கேட்க முடியவில்லை. அவனும் அவளுமாக எவ்வளவு ஆனந்தமாக வாழ்வோம் என்று எத்தனை இன்பக் கோட்டைகள் கட்டினார்கள். அவளும் அவர்களிடையில் இருந்த ஜாதி வித்தியாசத்தை மறந்துதான் போயிருந்தாள். அந்த ஒரு பிரச்னை குறுக்கே யிருப்பதாகவே நினைக்கவில்லை. ஆனால் இன்று சங்கிலியில் இருந்த சிலுவை இருவரிடையேயும் இருந்த பெரிய தாண்ட முடியாத பள்ளத்தாக்கை உணர்த்தியபோது தாங்க முடியாத பெரிய அதிர்ச்சி அவளுக்கும் ஏற்பட்டது.

"சீதாராம்...அப்படியானால்..." என்று மேலும் பேச முடியாமல் விம்மினாள்.

"சந்திரா...ஆமாம்...நாம் இருவரும் ஒருவரை யொருவர் மறக்க வேண்டியதுதான். இந்த ஜென்மத்தில் நாம் ஒருவரை யொருவர் அடைய முடியாதவர்களாகி விட்டோம். அடுத்த ஜென்மத்தில் கண்டிப்பாய்ச் சேர்ந்தே திருவோம். அப்போது இந்த ஜாதிப் பிணக்குகள் எல்லாம் இக் காட்டில் உலவாது. ஆகையால், சந்திரா! இன்றைய நம் சந்திப்பையே நாம் கடைசியாகக் கருதுவோம். ஆனால் ஒன்று மட்டும் உறுதி. சந்திரா, நான் உன்னையன்றி என் மனத்தில் யாரையும் கருதேன். நான் மணமும் செய்து கொள்ள மாட்டேன்" என்று அழுத்தம் திருத்தமாகக் கூறினான்.

சந்திராவும் உள்ளம் விம்மி, "சீதாராம், நம் காதல் இப்படி வியர்த்தமாகும் என்று கனவிலும் கருதவில்லை. ஆனால் நானும் என் வாழ்நாட்களைக் கன்னியாகவே கழிப்பேன். என் உள்ளத்தில் தங்களைத் தவிர வேறு யாருக்கு இடமிருக்கும்! நான் கன்னியாகவே இருந்து தங்கள் உருவத்தை மனத்தில் பூஜை செய்து கொண்டிருப்பதன் மூலமே நான் உங்களை யடைந்ததாக இன்பத்துடன் வாழ்வேன்" என்று தழு தழுக்கக் கூறினாள்.

இருவரும் அன்று பிரிந்தனர். அப்புறம் கல்லூரியில் சந்திக்கும் போதெல்லாம் முன் போன்ற அந்த ஆர்வம் கொண்ட பார்வை இல்லை. வெறும் அறிமுக முடையவர்களின் சாதாரணப் புன்னகையுடன் கூடியதாயிருந்தது. இருவரும் நிறைந்த பண்புடையவர்களா யிருந்தால் சூழ் நிலைக்குத் தக்கவாறு மனத்தைக் கட்டுப்படுத்தக் கூடிய சக்தியைப் பெற்றிருந்தார்கள்.

## 4

சீதாராமனின் தாயார் அமிர்தம்மாள் அவனை எவ்வளவோ வேண்டிப் பார்த்தும், வேண்டு கோளுக்கிணங்க முடியாததன் காரணம் சந்திரா அவனுடைய உள்ளத்தில் குடி புகுந்து விட்டது தான். தாயாரிடம் இந்த விஷயத்தை அவன் எப்படித் தெரிவிக்க முடியும்! அதனால் தான் தட்டிக் கழித்து வந்தான்.

கடைசியில் அவனுடைய தாயார் மிகவும் உருக்கமாக வேண்டவே, அவன் "அம்மா, தயவு செய்து இவ்விஷயத்தில் மட்டும் என்னை என் விருப்பப்படி இருக்க விடுங்கள். இதில் மூன்றாவது ஒருவர் விஷயமும் வாழ்க்கை முழுதும் பிணைப்பதாய் இருப்பதால் உங்கள் இஷ்டப்படி கேட்க முடியாதவனா யிருக்கிறேன்" என்று கண்டிப்பாகவே கூறி விட்டான்.

அமிர்தம்மாளுக்கு அவன் கூறுவது ஒன்றும் சரியாகப் புரியவில்லைதான். இருந்தாலும் அவனுடைய பேச்சைக் கேட்டு அவள் சிறிது மௌனமாகிவிட்டாள். "என்னமோ இப்போது இப்படிச் சொல்லுகிறான். எல்லாம் தன்னால் நாளடைவில் சரியாகப் போய் விடும்" என்று நினைத்தாள்.

ஆனால் அந்த "நாளடைவில்" அவள் எதிர்பார்த்த மாறுதல் உண்டாக்கவில்லை. அவனுடைய நாட்கள் ஓடுங்கிக் கொண்டு வந்தன. அந்திம



மனைவி:—என்னங்க, இது! பசு மாட்டைக் கொண்டு வந்து நடுக் கூடத்தில் கட்டி யிருக்கிறீர்களே! உங்களுக்குப் பைத்தியம் பிடித்திருக்கிறதா, என்ன?

கணவன்:—உனக்கு என்னடி தெரியும்? கொசுக்கடி தாங்க முடியாமல் இந்த மாட்டைக் கொண்டு வந்து கட்டியிருக்கேன்! எல்லாக் கொசுக்களும் மாட்டைச் சுற்றிக் கொண்டன. நமக்குக் கொசுவின் உபத்திரவமே இப்போது இல்லை!

காலம் சமீபித்தது. அவள் படுத்த படுக்கையானாள். அவளுடைய நிலை ரொம்பவும் மோசமாகி விடவே அவன் ஒரு மாத லீவ் போட்டுவிட்டான். தன் சகோதரிகளையும் வரும்படி எழுதினான். அந்தக் கடைசி காலத்தில் கூட அவள் சீதாராமனை விவாகம் செய்து கொள்ளும்படி வேண்டினாள். "இப்போதாவது நீ என் ஆசையை நிறைவேற்றுவாயா!" என்று வேண்டினாள்.

அவள் பேச்சைக் கேட்ட சீதாராமன் ஒரு கணம். "சரி அம்மா" என்று கூறி விடலாமா என்று நினைத்தான். ஆனால் அவன் காதல் இதயம் அதற்குத் துணியவில்லை.

கடைசியில் அமிர்தம்மாள் தன் ஆசை நிறைவேறாமலேயே சீதாராமனைத் தன்னந் தனியனாக்கி விட்டுப் போய்விட்டாள். சீதாராமன் தன் தாயின் பிரிவில் எவ்வளவு துயரமடைந்தான் என்பதை அளவிட்டுக் கூறமுடியாது. அவனுடைய எல்லாம் அவளாக இருந்தாள். அவள் போய் விட்டதும் அவனுக்கு உலகமே இருண்டு போய் விட்டது.

அவன் தாயார் இறந்து மூன்று வருடங்களாகி விட்டன. இதுவரை எந்த விதமான தலை வலியோ கால் வலியோ வந்தது கிடையாது. ஆனால் இன்று என்ன காரணமோ அவனுக்குத் தீவிரமாகத் தலை வலி பிடித்துக் கொண்டு விட்டது. அவன் கட்டிலில் படுத்து எதிர் சுவரை நோக்கிய போது அதில் தொங்கிய அவனுடைய தாயாரின் படம் அவனுக்குப் பழைய சம்பவங்கள் எல்லாவற்றையும் ஞாபகத்துக்குக் கொணர்ந்தது.

சீதாராமன் கண் விழித்து எழுந்தான். அவனுடைய தலை வலியும், சுரமும் முன்னைவிட அதிகமாய் விட்டிருந்தன. என்ன செய்வதென்று தோன்றவில்லை. 'அம்மா, அப்பா' என்று முனகிக் கொண்டிருந்தான். இப்படியாக இரண்டு மூன்று நாட்கள் சொந்தமாகத் தெரிந்த உபாயங்களையெல்லாம் கையாண்டான். பட்டினி கிடந்தும் பார்த்தான். களைப்பு அதிகமாகித் தலைவலியை இன்னும் அதிகமாக்கியது.

நான்காம் நாள் காலை. அவனால் படுக்கையை விட்டு எழுந்திருக்கவே முடியவில்லை. மெல்ல எதிர் வீட்டுப் பையனைக் கூப்பிட்டு அவனுடைய உதவியால் வண்டி வைத்துக் கொண்டு ஜெனரல் ஆஸ்பத்திரிக்குப் போனான். அவனைப் பரிசோதித்த டாக்டர் ஏதோ மனோ அதிர்ச்சியினால் இருதயம் பலஹீனமாயிருக்கிறது. ஆகையால் படுக்கையிலேயே இருக்க வேண்டும் என்று சொல்லி ஆஸ்பத்திரியிலேயே வைத்துக் கொண்டார்.

ஆஸ்பத்திரியில் தங்கியிருந்த அடுத்த நாள் இரவு அவன் அயர்ந்து தூங்கிக்கொண்டிருந்தான். இரவு வேலையில் இருந்த நர்ஸ் அவனுக்கு மருந்து கொடுக்க வந்த போது அவனுடைய முகத்தைக் கண்டதும், "சீதாராம்" என்று கூச்சலிட்டாள் ஆச்சரியத்துடனும் திகைப்புடனும்.

அந்தக் கூச்சலைக் கேட்டுக் கண் விழித்த சீதாராமன் தன் எதிரே நின்று கொண்டிருந்த நர்ஸைக் கண்டு ஒன்றும் தோன்றாமல் திக் பிரமையுடன் இருந்தான். அடுத்த கணம் "சந்திரா" என்றான்.

"நீங்களா ... உங்களுக்கா இந்த நிலை!"

"ஆமாம் சந்திரா நான்தான். உன்னைக் காணப் போகிறோமா என்ற ஏக்கம்தான் என் ஜுரத்துக்குக் காரணம்" என்றான்.

இருவரும் மனம் விட்டுப் பேசிக் கொண்டனர்.

சீதாராமனுக்குச் சற்று பலம் உண்டாகிக் கொண்டு வந்தது. அவன் மனம் ஏதோ காரணத்தால் குதூகலத்துடன் இருந்தது. சந்திரா சீதாராமனிடமிருந்து எல்லா விஷயங்களையும் தெரிந்து கொண்டாள். அவன் தாயார் இறந்து விட்டாள் என்பதைக் கேட்டதும் அவள் மிகவும் அனுதாபப் பட்டாள். ஆனால் பிறகு யோசிக்கும் போது அது அவளுக்கு ஒரு சுபச் செய்தியாகப்பட்டது. அவன் அவளைக் கல்யாணம் செய்து கொள்ளத் தடையாக இருந்த அவன் தாயார் இறந்து மூன்று வருடங்களாகி விட்டன. அவள் இனி அவள் கனவு பலிக்கும் அல்லவா! அந்த ஆசை அவள் உள்ளத்தில் வேர் விட ஆரம்பித்தது.

சந்திராவின் பராமரிப்பில் சீதாராமன் வெகு சீக்கிரம் குணமடைந்து விட்டான். ஒரு நாள் சந்திராவை எண்ணியபடியே கட்டிலில் படுத்துக் கிடந்தான். அப்படியே அயர்ந்து விட்டான்.

* * *

நீல வர்ணப் பட்டாடை அணிந்து கொண்டு சந்திரா, அவனிடம் வந்திருந்தாள்.

"சீதாராமன் அவளைக் கூர்ந்து நோக்கினான். அவளுடைய உள்ளத்தில் என்ன இருக்கிறது என்பது அவனுக்குத் தெரிந்தது. அவன் சிரித்துக் கொண்டே, "சந்திரா, நீ பக்கத்தில் இருந்ததால் தான் நான் இவ்வளவு சீக்கிரம் குணமடைந்தேன். உன் அன்புதான் என்னைத் தேற்றியது" என்றான்.

சந்திரா அவன். கூறியதில் மிகவும் புளகாங்கிதம் அடைந்து, "சீதாராம்!" என்று கூப்பிட்டாள்.

சீதாராமன் திரும்பிப் பார்த்தான். அவன் மனத்திலும் என்னவோ புது விதமான ஒரு ஆனந்தம் தோன்றியது.

சந்திரா அந்தக் கேள்வியைக் கேட்கத் துடித்துக் கொண்டிருந்தாள். ஆனால் எப்படிக் கேட்பது என்று வெட்கமாகவும் இருந்தது. பேச்சு ஏதோ லோகாபிராமமாகத்தான் போய்க் கொண்டிருந்தது. கடைசியில் துணிந்து கேட்டுவிட்டாள்.

"சீதாராம், நாம் இனி மணந்து கொள்வதில் ஏதும் தடையில்லையே!" என்றாள்.

சீதாராமன் அந்தக் கேள்வியைக் கேட்டதும் துணுக்குற்றான். அவன் அவளுடைய முகத்தை ஏறிட்டுப் பார்த்தான். அதில் கண்ட ஆர்வம், முகத்தில் தோன்றிய ஏக்கம், துடிப்பு எல்லாம் அவனை என்னவோ செய்தன.

"சந்திரா எப்படி முடியும்! அம்மா மறைந்து விட்டாள் என்பது உண்மைதான். ஆனாலும், அம்மாள் ஆத்மாவுக்கு எப்படித் துரோகம் செய்ய முடியும்! நாம் பிரதிக்ஞை பூண்டு விட்டோம். இப்படியே காலம் கடத்தி விடுவோம்" என்றான்.

சந்திரா இதைக் கேட்டதும் ஒரு கணம் தவித்தாள். அடுத்த கணம் கண்ணீர் பெருக்கினாள். "சீதாராம்! என்னை இப்படி மோசம் செய்யலாமா!" என்று கத்தினாள். அப்படியே மூர்ச்சையாகி அவன் மடியில் விழுந்து விட்டாள்.

சீதாராமன் திடுக்கிட்டு கண் விழித்துப் பார்த்தான். எதிரில் சந்திராவின் சகோதரன் கண்ணீரும் கம்பலையுமாக நின்று கொண்டிருந்தான். மிகுந்த துணுக்கத்துடன் "என்ன, என்ன!" என்று கேட்டான் சீதாராமன்.

"நேற்று ஆஸ்பத்திரியில் இருந்து திரும்பும் போது ஏற்பட்ட கார் விபத்தில் சந்திரா இறந்து விட்டாள்" என்று விம்மலுக்கும் விக்கலுக்கும் இடையே சொன்னான் அவன்.

இதைக் கேட்ட சீதாராமன் ஒரு கணம் திக் பிரமை பிடித்தவன் போல் உட்கார்ந்திருந்தான். அடுத்த கணம் "சந்திரா போய் விட்டாளா! இல்லை. என் இதயக் கோயிலில் இருந்து அவள் போகமாட்டாள்" என்று கத்திக் கொண்டே ஆஸ்பத்திரியை விட்டு ஓட்டமாக ஓடினான்.

Edited Printed and Published by R. Krishnamurthy at the "Kalki" Press
116-119, Sladens Garden, Poonamallee High Road, Kilpauk, Madras

REGD. No. M. 4392

*Registered as a newspaper in Ceylon*

எப்பொழுதும், எங்கும்



கைகளில் அழுக்கிலிருக்கும் கிருமிகள் பற்றிக்கொள்ளலாம்



அவைகளை உங்கள் உடலிலும் பரவச்செய்யலாம்

இந்த ஆபத்தை தவிர்க்க—

கைகளையும் உடலையும் தவறாமல்

**லைப்பாய் சோப்பினால்**

கழுவுங்கள்.

அது அழுக்கிலிருக்கும் கிருமிகளிலிருந்து உங்களை காப்பாற்றுகிறது.




L. 221-50 TM